# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சுபகிருது - ஆவணி, புரட்டாசி
2022 - ஆகஸ்ட், செப்டம்பர்





15.08.2022 அன்று
கோவிலூரில் நடைபெற்ற சுதந்திர தின விழா நிகழ்ச்சி

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சுபகிருது - ஆவணி & புரட்டாசி
2022 - ஆகஸ்ட் & செப்டம்பர் இதழ் - 122 & 123



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**

| | | |
|---|---|---|
| 1. | ஆசியுரை | 2 |
| 2. | கம்பராமாயணம் | 4 |
| 3. | ஓம் நமோ நாராயணாய | 7 |
| 4. | பரந்தாமன் பாமாலை | 13 |
| 5. | சைவநெறியே சாயி நெறி | 19 |
| 6. | உண்டிக் கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே | 23 |
| 7. | அதிசயமாய் வாழ்ந்த அன்னை | 27 |
| 8. | திருக்குறள் தெளிவுரை | 32 |
| 9. | திருவிளையாடற்புராணம் | 39 |
| 10. | மடாலய நிகழ்வுகள் | 44 |

தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

பூண்டதொர் கேழல் எயிறும் பொன்றிகழ் ஆமை புரள

நீண்டதிண் தோள்வலஞ் சுழ்ந்து நிலாக்கதிர் போலவெண் ணூலும்

காண்டகு புள்ளின் சிறகும் கலந்து கட்டங்கக் கொடியும்

ஈண்டு கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்

அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை.

– திருநாவுக்கரசர் தேவாரம்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

எண்பது வயதிலும் புதிய அனுபவமாகும். அவற்றின் மூலம் புதிய அறிவும், ஞானமும் ஏற்பட வாய்ப்புண்டு என்பதைக் கடந்த மாதங்கள் ஏற்பட்ட அனுபவங்களைக் கண்டு உணருகிறேன்.

இயற்கையான இரக்க சுபாவத்தை ஒதுக்கி வைத்து, உணர்ச்சி பூர்வமாகச் சிந்திப்பதும், செயல்படுவதையும் தள்ளி வைத்துச் சற்றே கடினமான அறிவுபூர்வமான முடிவுகளை எடுத்ததில் நல்ல பயன்கள் கிடைத்திருக்கின்றன.

புறவாச்சேரி கோ.ஆ.பொ. திருமடத்தில் நடத்திய அனைத்து ஆசிரியப் பெருமக்கள் கூட்டத்தில் எடுத்த அறிவுப்பூர்வமான முடிவுகளை நடைமுறைப்படுத்தி அதனால் நல்ல பயனைப் பெற்றிருக்கிறோம்.

மாணவர் சேர்க்கை குறைவால் அவசியம் என்று தோன்றிய முடிவை - நாச்சியப்பர் மாண்டிஸோரி பள்ளியை குழந்தைகள் சேராததால் மூடிவிட்டோம். அதே போல் இரண்டு தொடக்கப்பள்ளிகளிலும் 150 மாணவர்களுக்குக் குறைவாக மாணவர் சேர்க்கை இருந்தால் மூடப்படும் அல்லது வகுப்புகளை, ஆசிரியர்களைக் குறைக்க வேண்டி வரும் என்று எச்சரித்தோம். அந்த எச்சரிக்கை மிக நல்ல பலனைத் தந்து இருக்கிறது. திருக்களர் ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளியில் ஆசிரியர்கள் அதீதமான முயற்சியில் கவனம் கொண்டு குழந்தைகளைச் சேர்த்து இருக்கிறார்கள். இப்பொழுதைய மாணவர்கள் எண்ணிக்கை 158.

அதே போல, கோவிலூர் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளியில் ஆசிரியைகள் முயற்சி செய்து மாணவர்கள் சேர்க்கையை 140 என்ற அளவிலே உயர்த்தி இருக்கிறார்கள். விஜயதசமி அன்று இன்னும் 20 அல்லது 30 மாணவர்கள் சேர வாய்ப்பு உண்டு என்று இரண்டு பள்ளிகளிலும் கூறுகின்றனர். இந்த அனுபவம் கடுமையாக எச்சரித்தால், எச்சரிக்கப்பட்டால் எளியதாக அனுபவபூர்வமாக பிரத்தியச்சமாக நமக்குத் தெரிவித்துள்ளது. மெட்ரிக் மேல்நிலைப்பள்ளியிலும் நம் எச்சரிக்கையைத் தொடர்ந்து மாணவ சேர்க்கை கணிசமாக வளர்ந்திருக்கிறது.

எனவே நாம் மீண்டும் நம்முடைய பள்ளி ஆசிரியர்களுக்கு மாணவர் சேர்க்கை தொடர்ந்து உயரக் கடுமையாக முயல வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறோம்.

இன்றைய சூழ்நிலை இன்றளவும் மொத்த வருமானம் எல்லாச் செலவிற்கும் போதாத நிலையே உள்ளது, மேல் முன்னேற்றம் விரிவுபடுத்தல் ஆகியவை சிந்தனைக்கு அப்பாற்பட்டதாக உள்ளது.

*ஆசீர்வாதங்கள்!*



## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

(சபரி, சுக்ரீவன், அனுமன்)

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

சடாயு விண்ணகம் சென்று சேர்ந்த பின்னர் ராமர் லெட்சுமணர் சீதை சென்றிருந்த திசைகளின் துணைகொண்டு ராவணன் தேர் சென்ற வழியை ஊகித்துத் தொடர்ந்து சென்றார்கள். வழியில் மகந்த முனிவரின் ஆசிரமத்தை அடைந்தார்கள். ஆசிரமம் மிகத் தூய்மையாகவும், அமைதியாகவும் இருப்பது கண்டு வியப்படைந்தார்கள். அங்கே சபரிஎனும் பெண்மணி மகந்த முனிவரின் சீடர்களுக்கு உணவு சமைத்தல், அளித்தல் ஆசிரமத்தைச் சுத்தப்படுத்தித் தூய்மையாக வைத்தல் ஆகியவற்றைத் தவம் போல் செய்து வந்ததை அறிந்தார்கள்.

சபரி தன்னுடைய சேவையாலும் முனிவரிடம் கற்ற தியான யோக முறைகளாலும் மிக்க பக்குவம் அடைந்து பலகாலம் தவம் செய்தது போல் சக்தி பெற்றிருந்தாள். சபரிக்கு வீடு பேறு பெற வேண்டும் என்ற விருப்பம் மிகுந்து இருந்தது. தான் ராம, லெட்சுமணரைச் சந்தித்து அவர்களுக்குச் சேவை செய்யும் காலம் தனக்கு முக்தி கிடைக்கும் என்பதை உள்ளுணர்வால் உணர்ந்தாள். அவள் விரும்பியது போல ராம, லெட்சுமணர் ஆசிரமம் வந்தார்கள். பெரும் மகழ்ச்சியோடு அவர்களுக்குக் காய் கனிகளைக் கொண்டு உணவு பரிமாறினாள். அப்பொழுது'அவர்களுடைய துயரமான சூழ்நிலை அறிந்து வானரத் தலைவன் சுக்கிரீவன் என்பவன் தன் அண்ணனுக்குப் பயந்து ரிஷி முக மலையில் (இரலை மலை) இருக்கிறான். அவனைப் பார்த்து உதவி கோருங்கள் என்று ரிஷிமுகரூப மலைக்குச் செல்லும் வழிகளைச் சொல்லி ராமர் பாதம் தொட்டு வணங்கி விண்ணுலகம் அடைந்தார்.

இந்தச் சம்பவத்தோடு ஆரணிய காண்டம் நிறைவே பெறுகிறது. அடுத்ததாக நான்காவது காண்டமாகிய கிஷ்கிந்தா காண்டம் தொடங்குகிறது. இந்தக் காண்டத்தில் பெரும் பகுதி கிஷ்கிந்தை மலையில் நடைபெறுவதால் கிஷ்கிந்தா காண்டம் என்று பெயர் பெற்றது.

சபரியின் வழிகாட்டுதலின் மூலம் ரிஷிமுக ரூப மலை

அடைந்தார்கள். வாலி அனுப்பி வந்தவர்கள் என்று அஞ்சி, சுக்கிரீவன் குகைக்குள் ஒளிந்து கொள்ள அனுமன் அவர்களைப் பார்த்து, தவக் கோலத்தையும் வில்லையும் பார்த்து ராமர், இலக்குவன் என்று யூகித்து அவர்களைத் தடுத்து நிறுத்தி யார் என? விசாரித்தான். அவர்கள் அனுமனை யார் என்று விசாரிக்க, நான் வாயு புத்ரன் அஞ்சனையின் மகன், சுக்ரீவனின் ஏவலாளன் என்று கூறினான். ராமபிரான் அனுமன் தோற்றத்திலும், அவன் பேசிய தோரணையிலும் அறிவுடையவன், வீரமும் உடையவன் என்று புரிந்து சொல்லின் செல்வன் என்றே அழைக்கின்றான்.

பின்னர் சுக்ரீவனைச் சந்தித்துச் சுக்ரீவனின் சூழ்நிலை இவற்றைக் கேட்டறிந்தான். அனுமன், வாலியின் வீரம் தவத்தால் பெற்ற வீரம். போரிட எதிரில் வருகின்ற வீரனின் பலத்தில் பாதியைப் பெற்று விடுவான் என்பதை அறிந்து சுக்கிரீவன் மேல் கோபம் கொண்டு விரட்டி அடித்து விட்டு அவன் மனைவி உருமையையும் கவர்ந்து கொண்டான் என்று சொன்னதும் தாரத்தை இழந்தவன் என்று அறிந்து பரிதாபம் கொண்டு அவனுக்கு உதவ ஒப்புக்கொண்டான்.

கிஷ்கிந்தா மலையை அடைந்து வாலியைப் போரிட அழைத்து மறைந்து இருந்து அம்பு எய்தி வாலியை வீழ்த்தினான். மார்பில் துளைத்த அம்பைப்பார்த்து எய்தவர் தசரதன் மைந்தன் ராமபிரான் என்பதை அறிந்து மனத்திருப்தியடைந்தான். ராமபிரானைக் கடவுள் அவதாரம் என்று முதலில் கண்டு கொண்டவன் வாலிதான்.

ராமபிரானை அருகில் அழைத்து வீராதிவீரனான தாங்கள் என்னை மறைந்திருந்து கொல்லலாமா? என்று வினவி ராமருடைய சமாதானத்தைக் கேட்டு அறிந்து ராமபிரான் அம்பினாலே தான் முக்தி அடைவேன் என்று மகிழ்ந்து கூறித் தன் மகன் அங்கதனை அடைக்கலமாகக் கொடுத்து, சுக்ரீவனுடைய அறியாமையை மன்னித்து அவனைப் பாதுகாத்து உதவ வேண்டும் என்று வேண்டிக் கொண்டு வானுலகை அடைந்தான்.

பின்னர் லெட்சுமணனால் முடி சூட்டப்பட்டு மன்னனானான் சுக்ரீவன். பிறகு நாலு மாத காலத்திற்குள் படைகளைத் திரட்டித் தங்களை வந்து சந்திக்குமாறு சுக்ரீவனிடம் கூறிவிட்டுத் திரும்பினார்கள் ராம, லெட்சுமணர்.

ஆனால் சுக்ரீவன் வாக்குறுதியை மறந்து கள்ளிலும், களியாட்டத்திலும் மிதந்தான். தன் அண்ணியான தாரையையும் கவர முயன்றான். கம்பன் வர்ணித்த தாரை கற்பின் வலிமையாக இருந்து மறுத்துவிட்டாள். குறிப்பிட்ட காலத்திற்குள் படையோடு சுக்ரீவன் வராத காரணத்தால் லெட்சுமணன் வந்து சுக்ரீவனுடைய அகந்தையையும், பிழையையும் அறிந்து கண்டித்து எச்சரிக்கை செய்து திரும்பினான். அதன் பின்னர், பெரும் வானரப் படையோடு சுக்ரீவன் ராம, லெட்சுமணரிடம் வந்து மன்னிப்புக் கேட்டுச் சேர்ந்து கொண்டான். அனுமன் தலைமையில் பல திசைகளிலும் வானர வீரர்களை அனுப்பி, சீதையைத் தேடச் சொன்னான்.

இந்தப் படை வீரர்கள் மகேந்திரமலையை அடைந்தனர். அங்கே சென்றதும் மேலே எங்கே செல்வது? எப்படிச் செல்வது? என்ற கலக்கம் அவர்களிடம் தோன்றியது. அந்த நேரத்தில் சிறகுகள் அற்றுக் கிடந்த கழுகுஇன மன்னரான சம்பாதியைப் பார்த்தார்கள். சம்பாதி சடாயுவின் அண்ணன் ஆவார். இருவரும் சூரியனின் ரதமோட்டி அருணனின் புதல்வர்கள். சிறு வயதில் சடாயு சூரியனைக் கொடுக்கச் சொல்லி விளையாட எண்ணினான். சூரியக் கதிரொளி வெப்பம் தாங்காமல் தன்னைக் காப்பாற்ற வேண்டி அபயக் குரல் கொடுத்தான். அப்போது அண்ணன் சம்பாதி தன் சிறகுகளை விரித்துத் தம்பிக்குத் துயரம் ஏற்படாது காப்பாற்ற முயன்றான். அப்போது சூரியக் கதிரொளி வெப்பம் தாங்காது சிறகுகள் இரண்டையும் இழந்து கீழே விழுந்தான். வானரப் படைகள் மகேந்திர மலைக்கு வந்து ராமநாம ஜபம் செய்யும் பொழுது சிறகுகள் திரும்ப உருவாகும் என்ற நிலையில் சம்பாதி கிடந்தார். என்ன செய்வது என்று தெரியாமல் தவித்த குரங்கின வீரர்கள் ராம நாமத்தை ஜபித்து ராமனை வேண்டினார்கள். இந்த ராம நாம ஜபத்தின் காரணமாகச் சம்பாதி சிறகுகளை மீண்டும் பெற்றுப் புதுத்தெம்புடன் இருந்தார். குரங்கின வீரர்கள் சொன்ன செய்தியைச் சொல்லித் தன் தம்பி ஜடாயு வானுலகம் அடைந்துவிட்டான் என மிக வருந்தினான். அனுமன் போன்ற குரங்கின வீரர்களுக்கு இங்கிருந்து ராவண நாடான இலங்கைக்குச் செல்வது மிகவும் கடினம். அதிலும் ராவணனுடைய வீரர்கள் ஈவு இரக்கம் அற்றவர்கள். எனவே உங்களில் ஒருவரோ, இருவரோ கடல் தாண்டிச் செல்லுங்கள். தவித்த கழுகு இனங்களைக் காப்பாற்றுங்கள் என்றான்.

குரங்கின வீரர்கள் கூடிக் கலந்து பேசி அனுமன் ஒருவனே கடலைக் கடந்து சென்று தீங்கின்றி மீள வல்லவன் என்று எல்லோரும் முடிவு செய்து அனுமனை உற்சாகப்படுத்தி மகேந்திர மலையிலிருந்து புறப்படச் செய்தார்கள்.

அனுமன் விஸ்வரூபம் வடிவெடுத்து வானில் பறந்து சென்றதால் மற்றவர்களுக்கு அவனுடைய திருவடி மட்டுமே தெரிந்தது. அதனாலே அனுமன் திருவடி என்ற நற்பெயர் பெற்றான்.

அனுமன் விஸ்வரூபம் எடுத்து வானத்தில் பறந்து இலங்கையை நோக்கிச் சென்றதோடு கிஷ்கிந்தா காண்டம் நிறைவு பெறுகிறது. கிஷ்கிந்தா காண்டத்தின் 16 படலங்கள் ஆயிரத்துக்கு மேற்பட்ட பாடல்கள்; கிஷ்கிந்தா காண்டத்தில் புதிதாக அறிமுகப்படுத்திய பாத்திரங்கள் வாலி, தாரை, அங்கதன், சுக்ரீவன், உருமை, அனுமன், சம்பாதி ஆவார்கள்.

16 படலங்களையும் நாம் வரிசையாகப் பார்க்க முயலுவோம்.

*(தொடரும்...)*

## ஓம் நமோ நாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 21. நாதன்கோவில் என்னும் திருநந்திபுரவிண்ணகரம்

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி

108 திவ்ய தேசங்களுள் இருபத்தியொன்றாவது திவ்ய தேசம், நாதன்கோவில் என்னும் திருநந்திபுரவிண்ணகரம். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது இருபத்தியொன்றாவது திவ்யதேசமாகும். கும்பகோணத்திலிருந்து கொருக்கை என்னும் ஊருக்கு வந்து, அங்கிருந்து ஒன்றரை மைல் நடந்தால் இத்தலத்தை அடையலாம். 108 திவ்ய தேசங்களில் ஆறு விண்ணகரங்கள் உள்ளன.

1. திருவிண்ணகரம் – ஒப்பிலியப்பன் கோவில்

2. நந்திபுரம் விண்ணகரம் – கும்பகோணம் அருகிலுள்ள நாதன் கோவில்

3. சீராம விண்ணகரம் – திருக்காழி தாடாளன் கோவில்

4. அரிமேய விண்ணகரம் - திருநாங்கூர் குடமாடுகூத்தன் கோவில்

5. வைகுந்த விண்ணகரம் - திருநாங்கூர் வைகுந்தநாதன் கோவில்

6. பரமேச்சுர விண்ணகரம் - பரமபதநாதன் கோவில், காஞ்சிபுரம்

இந்த ஆறு விண்ணகரங்களுள் முதல் விண்ணகரமான திருவிண்ணகர் - ஒப்பிலியப்பன் கோவில் என்ற திவ்யதேசத்தைப் பதின்மூன்றாவது திவ்யதேசமாக முன்பதிவில் கண்டுள்ளோம். இப்பொழுது நாதன் கோவில் என்று அழைக்கப்படுகின்ற நந்திபுர விண்ணகரத்தை இப்பதிவில் காண்போம். மன்னார்குடி தொடங்கி இந்த நாதன்கோயில் முடிய உள்ள பகுதிக்குச் செண்பகாரண்யம் என்று பெயர்.

பாற்கடலில் எம்பெருமானின் பாதாரவிந்தங்களையே பற்றிக் கொண்டிருந்த பிராட்டிக்கு, ஒளி பொருந்திய எம்பெருமானின் திருமார்பில் நித்யவாசம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் வந்தது. அதனால் திருப்பாற்கடலிருந்து புறப்பட்டு, செண்பகாரண்யம் என்னும் இவ்விடத்தில், திருமகள் கிழக்கு நோக்கிக் கடுந்தவம் செய்தாள். எம்பெருமானும் ஒரு ஐப்பசி மாதம், சுக்கில பட்சம் வெள்ளிக்கிழமை அன்று தேவி முன்னர் பிரத்தியட்சமாகி தன் நெஞ்சில் திருமகளை ஏற்றுக் கொண்டார்.

இங்குள்ள

மூலவர் - நாதநாதன் என்ற போக ஸ்ரீனிவாசன்

தாயார் - செண்பகவல்லித் தாயார்

உற்சவர் - ஜெகநாதன்

தீர்த்தம் - நந்தி தீர்த்த புஷ்கரிணி

விமானம் - மந்தார விமானம்

கோலம் - மேற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம்

தலவிருட்சம் - செண்பகமரம்

கிழக்கு நோக்கித் தவம் செய்த நிலையிலிருந்து பிராட்டியை, பெருமான் எதிர்கொண்டு ஏற்றுக் கொண்டமையால், இத்தலத்தில் எம்பெருமான் மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

செண்பகாரண்யத்தில் தேவி தவம் செய்தபடியால், செண்பகவல்லி என்ற திருநாமம். திருமகளின் எண்ணத்திற்கு இசைந்து, பிராட்டியை நெஞ்சில் ஏற்றுக் கொண்டதால், பெருமானுக்கு, போக ஸ்ரீனிவாசன் என்ற நாமம் உண்டாயிற்று. இப்பெருமான் கையில் வாள், வில், சக்கரம், தண்டாயுதம், சங்கு ஆகிய 5 ஆயுதங்களைக் கொண்ட பஞ்சாயுதனாகத் திகழ்கின்றார்.

இங்குள்ள இராஜகோபுரம் 5 நிலைகளை உடையது. இத்தலம் சந்திர தோஷத்திற்குப் பரிகார தலமாகும். பல்லவ மன்னன் நந்திவர்மன், குழந்தை வரம் வேண்டி, இங்கே வந்து பெருமாளையும் தாயாரையும் வேண்டிக் கொண்ட பின், குழந்தை பிறந்து, அக்குழந்தைக்கு நந்திபுர விண்ணகரப்பன் என்று பெயர் சூட்டினாராம்.

மஹாவிஷ்ணு சுக்லபட்ச அஷ்டமி தினம் அன்று, மஹாலெஷ்மியைத் தேடிவந்து தரிசனம் கொடுத்துத் தன் மார்பில் குடியேற இடம் கொடுத்ததால், இத்தலத்தில் சுக்லபட்ச அஷ்டமி சிறப்பு வாய்ந்த தினமாகும். ஒரு சமயம், இந்திரனும் அக்னி தேவனும் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தனர். உலகில் அதிகமான இரக்ககுணம் உள்ளவர் சிபிச் சக்கரவர்த்தி என்று எல்லோரும் சொல்வது உண்மையா என்று சோதித்துப் பார்ப்பதற்காக, இந்திரன் ஒரு வேடனாகவும், அக்னி தேவன் ஒரு புறாவாகவும் மாறிப் பூலோகத்துக்கு வந்தார்கள்.

வேடன் புறா மீது அம்பெய்ய, பதறிப் பறந்த புறா, கோவிலில் வழிபட்டுக் கொண்டிருந்த சோழன் சிபியின் மடியில் வந்து விழுந்தது. சிபி மன்னன், அதைத் தடவிக் கொடுக்கும் வேளையில், வேடன் வந்து புறாவைக் கேட்கின்றான். கொடுக்க மறுத்த சிபி மன்னன், அதற்கு இணையாக, தன் சதையை அறுத்துத் தரச் சம்மதிக்கின்றான். புறாவைத் தராசின் ஒரு தட்டில் வைத்து, மறுதட்டில் தனது தொடைச்சதையை அறுத்து வைக்கின்றான். அது சமநிலைக்கு வரவேண்டும் என்று, தன் தசைகளை அறுத்து வைக்க, புறாத்தட்டு மேலே ஏறும் வழியைக் காணோம். திகைத்துப் போன மன்னர், தானே தராசில் அமர்ந்தார். இந்த அரிய தர்மத்தின் சிறந்த நிகழ்ச்சியைக் காணவே கிழக்கு நோக்கி அமர்ந்த பெருமாள், மேற்கு நோக்கித் திரும்பி விட்டதாகவும் ஒரு கதை நிலவி வருகின்றது.

சிவபெருமானது நந்திகேஸ்வரர், ஒரு சமயம் மஹாவிஷ்ணுவைக் காண வைகுண்டத்திற்கு வந்தார். அங்கு காவலில் நின்ற துவார பாலகர்களைக் கேளாது உள்ளே புக முயன்றார். அப்போது துவார பாலகர்கள் தடுத்து, தங்கள் அனுமதி பெறாமல் உட்செல்ல முயன்ற காரணத்தால், காரணங்காணா அளவிற்கு நந்தியின் உடம்பில் உஷ்ணம் எரியக்கடவது என்று சாபமிட்டனர். நந்தி, தன்நிலையைச் சிவபெருமானிடம் சென்று உரைக்கின்றார். சிவனாரோ, குடந்தைச் சக்கரபடித் துறைக்குத் தென்பாலும், மன்னார்குடிக்கு வடபாலும், விண்ணகரம் ஒப்பிலியப்பனுக்கு மேற்கேயும், அரங்கனுக்குத் தெற்கேயும் உள்ள செண்பகாரண்யத்திற்குச் சென்று, திருமாலைக் குறித்துத் தவமிருந்து நந்தியின் சாபத்தைப் போக்கிக் கொள்ளுமாறு உபாயம் சொல்கின்றார். நந்தியும் அவ்விடத்தே வந்து நெடுங்காலம் கடுந்தவம் செய்ய, மஹாவிஷ்ணு தோன்றிச் சாபம் தீர்த்தார். இத்தலம் தனது பெயராலேயே விளங்க வேண்டும் என்று சொல்ல, அன்று முதல் நாதன்கோவிலாய் இருந்த தலம் நந்திபுர விண்ணகரமாயிற்று.

விஜயரங்க சொக்கப்ப நாயக்கர் என்னும் நாயக்க மன்னர், தன் அன்னைக்குத் தோன்றிய காரணம் காணா நோயை நீக்க வேண்டி, இப்பெருமானடி இறைஞ்சினார். அவ்விதமே நோய் நீங்கியதால், இக்கோயிலுக்குப் பல அரிய திருப்பணிகள் செய்தார். ஓர் அரசர் அணிய வேண்டிய சகல ஆபர்ண அணிகலன்களுடன் நாயக்க மன்னர், தமது இரண்டு மனைவியாருடனும் தாயுடனும் இங்கு நின்றுள்ள சிற்பக் கோலங்கள் மிகவும் அழகானதாகும்.

என் அய்யா, காப்பியக்கவிஞர், நற்றமிழ்நாவலர் கவிஞர்கோ.நா.மீனவனார் நாதன்கோவில் குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. நாதநாதப் பெருமான் வாழும் நந்திபுர விண்ணகரத்தில், குளிர்ந்த மலர் போன்ற அழகிய முகத்தையுடைய ஜெகநாதர் உற்சவராய் உறைந்திருக்கின்றார். மலரில் உள்ள தேனைக் குடித்த வண்டுகள், தக்கேசிப் பண்ணில் பாடுகின்ற பாடலில் காதலுற்று, இத்தலத்தில் அமர்ந்திருக்கின்றார். அவருடைய பாதங்களைப் போற்றி நம்மையும் பாடச்சொல்லும் முதல் பாடல் :

*நாதனார் தான்வாழும் நந்திபுர விண்ணகரம்*
*சீதமலர் வதனத்துச் செகநாதன் உறையுமிடம்*
*தாதாரும் மலர்வண்டு தக்கேசிப் பண்பாடக்*
*காதலினால் தானமர்ந்தான் கழல்போற்றிப் பாடுமினே*

2. இத்திருத்தலம், கவி காளமேகப் புலவர் பிறந்த தலம், காதுகளை எப்போதும் ஆட்டிக் கொண்டிருக்கும் நந்தியின் பிணியைப் போக்கிய தலம், தவமிருந்த செண்பகவல்லியைத் தன்மார்பில் ஏற்றுக் கொண்ட தலம், பாவங்களை அகற்றக்கூடிய தலம் என்று பணிந்து பலன் பெற வாருங்கள் என நம்மை அழைக்கும் இரண்டாம் பாடல் :

*கவிகாள மேகம்எனும் கார்முகிலான் பிறந்தபதி*
*செவியாட்டும் நந்திபிணி சீராக்கிக் காத்ததலம்*
*தவமிருந்த செண்பகத்தைத் தன்மார்பில் ஏற்றஇடம்*
*பவமகற்றும் இதுவென்று பணிந்துய்ய வாருமினே*

3. பழையூர், பம்பப் படையூர், அரியப் படையூர், பட்டீசுவரம் ஆகிய இடங்களில் சோழர்களின் பாசறைகள் இருந்தன. அவ்விடங்கள் இந்த நந்திபுரம் பகுதியில் இருந்தன. இவ்விடம் ஒரு காலத்தில் விண்ணைமுட்டும் மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும் சூழ்ந்ததாக இருந்தது. பொன் நகருக்கு இணையாகப் பொலிவு பெற்றுத் திகழும் நந்திபுரம் என்னும் இத்திருநகரில் வீற்றிருப்பவனை வணங்கச் சொல்லும் மூன்றாம் பாடல் :

*பொன்னிநதிக் காவலரின் போர்ப்படைகள் இருந்தஇடம்*
*மன்னவர்கள் தாம்வாழ்ந்த மாளிகைகள் சூழ்ந்தஇடம்*
*பொன்னகருக் கிணையாகப் பொலிந்திருந்த நந்திபுரம்*
*என்னுமிந்தத் திருநகரில் இருப்பானை வணங்குமினே*

4. மயில் ஆடுகின்ற சோலை, மாமரத்துக் குயில் பாடும் இசை, இவற்றுக்கு இடையே குழல் ஊதுகின்ற கோவிந்தன், தயிரை உண்டு, பாலை உண்டு, தாயார் கையில் அடியும் வாங்கிய நாதன். அவன்மேல் மனதைச் செலுத்தி வாழச்சொல்லும் நான்காம் பாடல் :

*மயிலாடும் சோலை மகிழ்ந்திங்கு மாமரத்துக்*
*குயில்பாடும் இசைக்கிடையே குழலூதும் கோவிந்தன்*
*தயிருண்டு பாலுண்டு தாயார்கை அடியுண்டு*
*மயல்கொண்ட நாதன் மனங்கொண்டு வாழுமினே*

5. தேவர்களுக்கு எட்டாதவன். பகைவர்களுக்கும் கிட்டாதவன். சிவன், விஷ்ணு, பிரம்மா ஆகிய மூவரில் முதலாமவன். பூமி, அந்தரம், சுவர்க்கம் என்னும் மூன்று உலகையும் ஆள்பவன். அத்தகைய தேவன் உறையும் நந்திபுரவிண்ணகரமான இத்தலம், பாவத்தைத் தீர்க்கும் எனப் பணிந்தவர்கள் பயன்பெறுவர் எனக் கூறும் ஐந்தாம் பாடல் :

*தேவருக்கும் எட்டாதான் தெவ்வருக்கும் கிட்டாதான்*
*மூவருக்கும் இவன்முதல்வன் மூவுலகும் தானாள்வான்*
*தேவன் இருந்துறையும் திருநந்தி விண்ணகரம்*
*பாவத்தைத் தீர்க்குமெனப் பணிந்தார்தாம் பயன்பெறுவார்*

6. தியானம் செய்யக்கூடிய கடவுள், இவனைக் காட்டிலும் வேறொருவர் இல்லை என்று ரிஷிகள், அழகிய இசையால் பாடல்களைப் பாடிச் சேவிப்பர். பாட்டுக்கு ஏற்றபடி ஆடவும் செய்வர். பூவுலகில் இதுபோல் அழகுமிக்க நகரில்லை என்று தேவர்கள் மலர்மாரி பொழிய ஜகந்நாதன் எழுந்தருளியுள்ள தலம் நாதன் உறைகின்ற நந்திபுர விண்ணகரமாகும். மனமே, நீ அதை அடைவாயாக என்று கூறும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

*எண்ணில் நினைவெய்தி இனியில்லை இறையென்று*
*முனியாளர் திருவார்*
*பண்ணில் மலிகீதமொடு பாடிஅவர் ஆடலொடு கூட எழிலார்*
*மண்ணில் இதுபோல் நகரில்லையென வானவர்கள்*
*தாம்மலர்கள் தூய்*
*நண்ணி உறைகின்ற நகர்நந்திபுர விண்ணகரம் நண்ணு,*
*மனமே!*

*(தொடரும்...)*



## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 16

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

உயர்வற உயர்நலம் கொண்ட பைந்தமிழ்ப் பரந்தாமன் பாமாலையில் மலையாள நாட்டுத் திருப்பதிகளாகத் திருநாவாய் முதல் திருவண் பரிகாரம் வரை (65-77)யான 13 திருப்பதிகளைச் சேவிக்க வைத்த காப்பியக் கவிஞர் மீனவனார், சேவாதிகளாகிய நம்மைப் பாண்டி நாட்டுத் திவ்யதேசங்களை வணங்கச் செய்விக்கும் ஆர்வத்தில் திருக்குறுங்குடி என்னும் தலத்து நம்பியம் பெருமாளைக் குறுங்குடி வல்லியோடு காட்டி வணங்கிப் பணியுமினே என ஆணையிட்டவாறு வணங்குகிறோம்!

சைவத்தில் பாண்டிப் பதினான்கு என்பர்; வைணவத்தில் பாண்டிப் பதினெட்டு என்பர். சைவ வைணவம் போற்றும் பாண்டிய நாடு, தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாடு என மணிவாசகர் போற்றிப்பரவும் வகையில் மணிவாசகத் தமிழும் நம்மாழ்வார் நற்றமிழும் பிறக்கக் காரணமாய் இருந்தது பாண்டிய நாடு என்ற முன்னுரையுடன் மீனவர், செல்வத்தை வளனா மதிக்கும் மானிடத்தைப் பாடாது மாதவனைக் குடியாய்க் கொண்ட குறுங்குடி நம்பியாம் கிழக்கு நோக்கிய திருமுகப் பொலிவுடன் நின்ற கோலத்து நம்பியை நம்பி வணங்குமினே என்ற படி நாமும் வணங்குகிறோம்.

ஒரு காலத்தில் வராக அவதாரம் எடுத்த பரந்தாமன் தன் பிராட்டியோடு இங்குள்ள சிறு குடிலில் தஞ்சம் புகுந்து தங்கியதால் குறுங்குடி எனப் பெயர் அமைந்தது. பூமியை இடந்த அதிபயங்கரவராக (பன்றி) வடிவமாய் இருந்ததால் பலரும் காண அஞ்சிய நிலையில் தம்மைக் குறுக்கிக் கொண்டதால் குறுங்குடி என்பதாய்ப் பெயர் அமைந்தது என்பர்.

இக்குறுங்குடிக் கோயில் கோபுரத்தில் உள்ள சிற்பங்கள் கலையழகு மிக்கவை என்பதால் இவ்விண்ணகரக் கோபுரத்தைச் சித்திரக் கோபுரம் என்பார்கள் என மீனவர் தம் பாமாலையில் சிற்பத்தின் அழகுபொலிகின்ற திருக்குறுங்குடி (1) என்கிறார். இக்கோபுர மாண்பைப் பாரதியார் குலவு சித்திரம் கோபுரம் கோயில் என்பதாகக் கலைமகள் கொலுவீற்றிருப்பதைக் கூறுவது போல் உள்ளது எனலாம்.

மதங்களில் புரட்சி செய்த மகானான இராமானுசர் இக்குறுங்குடியில் தங்கியிருந்து அருள் பெற்றதாக வரலாறு கூறுகிறது. ஆழ்வார்களில் பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் மற்றும் நம்மாழ்வார் என நால்வரும் மங்களாசாசனம் செய்துள்ளார்கள். மேலும் சேர மன்னர்கள் பலர் இக்குறுங்குடிக்குத் தெய்வ கைங்கர்யம் செய்துள்ளனர் என அழகிய நம்பியுலா எனும் நூலில் குறிப்புள்ளது. இந்நூலுள் குறிப்பிடும் உதயமார்த்தாண்டர் பற்றித் தாமும் உதயமார்த் தாண்டனார் உண்டாக்கு பந்தல் என 5ஆம் பாடலில் கூறியதாகக் கேட்டுக் குறுங்குடி நம்பியை விட்டுத் திருவரமங்கை (எ) வானமாமலை என்னும் திவ்விய தேசத்திற்கு மீனவருடன் பயணிக்கின்றோம்.

79ஆவது திவ்யதேசமான திருவரமங்கை என்னும் வானமாமலை என்ற தலம். திருச்சிறீவரமங்கை என்பதாக அழைக்கப்படுவதாய் மீனவர் முதலில் நமக்குக் கோயில் பற்றி அறிமுகம் செய்ததும் கிழக்கு நோக்கிய வீற்றிருந்த திருக்கோல மூலவரை ஸ்ரீவரமங்கையோடு வணங்குகிறோம். ஈண்டுக் கூறும் ஸ்ரீவரமங்கை என்ற தாயார் திருவரகுணமங்கை எனப் பெயருடையவராகவும் மூலவர் தோத்தாத்திரி நாதன் என்பவராகவும் உற்சவர் தெய்வநாயகன் என்ற பெயருடையவராகவும் திருக்காட்சி நல்குகின்றனர். மூலவரின் இருபுறமும் உபய நாச்சியார்களாக இருக்கும் தாயார் இருவருக்கும் கோயில் சுற்றில் தனித் தனி சந்நிதியாய்க் கோயில் கொண்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

இங்குள்ள பரந்தாமனாம் தோத்தாத்திரிநாதன் உயிர்களின் நோய் நீக்க வல்ல மாமருத்துவராக உள்ளதாய்க் கூறும் மீனவர், வானமாமலை என்ற சிறப்புப் பெயர் பற்றியதை விரிவாகக் கூறி வணங்கச் செய்கிறார். மூலிகைக்குரிய தாவர வனமும் மலையும் சூழ்ந்த இடமாதலால் வானமாமலை என மருத்துவத் தொடர்புடைய பெயர் அமைந்ததாம்.

தேவலோக ஊர்வசியும் திலோத்தமையும் இத்தலத்திற்கு வந்து வைகனக முனி என்பவரிடம் எட்டெழுத்து மந்திரம் கற்றுத்தோத் தரித்து இங்கேயே ஸ்ரீதேவி அம்சமாய் பரந்தாமனின் இருபுறம் தங்கியிருக்கும் பேறுபெற்றதால் ஸ்ரீவரமங்கை என இத்தலம் பெயர் பெற்றதாகக் கூறுவதை மீனவர், ஊர்வசியாள் திலோத்தமையின்

உளமகிழ வரந்தந்தான் என்றார். இந்த அளவில் வரமங்கையைச் சேவித்தவாறு திருவைகுண்டம் எனும் ஸ்ரீ வைகுண்டத்திற்கு மீனவருடன் சென்று அங்குள்ள கள்ளப்பிரானை உளமாரக் கும்பிடுகிறோம்.

கள்ளனாய்ப் பத்தருக்குக் காட்சி தந்த கார்வண்ணன் என்றே மீனவர் தம்பாமாலையில் பாடுகிறார். பூலோக வைகுந்தம் எனப் பொருள்படும்படி வைகுண்டம் எனப்பட்ட திவ்ய தேசமாகும். நவதிருப்பதிகளுள் நான்காவது தலப் பெருமை உடையதாகும். தாயார் வைகுந்த வல்லியுடன் கிழக்கு நோக்கிய நின்ற கோலத்தில் சேவை சாதிக்கும் ஸ்ரீ வைகுந்த நாதனை மீனவர் காட்டக் கண்டுகளிக்கின்றோம். இத்திவ்யதேசக் கள்ளப்பிரானின் பெயருக்குரிய தத்துவமாக மீனவர் கூறுகையில், திருட்டுத் தொழிலைச் செய்யும் பாவியின் இதயத்திலும் பரந்தாமன் குடி கொண்டு அவனையும் நல்வழிப்படுத்தி முத்தி தர வல்ல கள்ளனே - எனக் கூறும் போது நம் உள்ளத்தில் இடம் பிடிக்க வேண்டிக் கொள்கின்றோம்.

இத்தகு கள்ளப் பிரானாக இருந்தாலும் அழகு கொழிக்கும் சௌந்தரநாயகனாக உள்ள அழகன் என்பதால் இத் தெய்வத் திருமேனியைச் சமைத்த சிற்பி தான்வடித்ததையே மோகித்து மெய்மறந்து அப்படிமத்தின் கன்னத்தைக் கிள்ளியதால் குழிவிழுந்த வடுவுடன் காட்சி தருவதாய்க் கள்ளழகன் இருப்பதற்கான வரலாற்றைப் பாமாலையின் 5 ஆம் பாடலில் மீனவர் பாடியுள்ளதால் காணமுடிகிறது.

நம்மாழ்வார் மங்களாசாசனம் பெற்ற திருவைகுண்டத்தை வணங்கியதும் திருவரகுண மங்கை எனும் 81ஆம் திவ்யதேசப்பரந்தாமனை மீனவனார், வையத்தார் போற்றும் வரகுணநல் மங்கையுளான் தொழுமின்காள்(1) என்றபடித் தொழுகின்றோம்.

திருமாலுக்குப் படுக்கையாகவே காலத்தைக் கழிக்கும் ஆதிசேடன் திருவைகுண்டத்தில் பரந்தாமனுக்குக் குடை பிடிக்கும் தனித்த தன்மையின் சிறப்பும் போல் இவ்வரகுண மங்கையும் ஒரு தனிச்சிறப்புடைய தலமாக இருப்பதை மீனவர் இப்பரந்தாமன் பாமாலையில் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

*சத்தியவான் தனக்கிங்கே சாகா வரம் நல்கி*
*முத்திதரும் மறை முதல்வன் மூவிரண்டோ டிரண்டெழுத்தை*
*நித்தலுமே நாம் ஓதிப் பணிய பாவமது தீர்ந்திடும் (4)*

ரோமச முனிவரின் சீடன் சத்தியவான். ஒரு குளக்கரையில் உயிர்க் கொலையாக மீன் பிடிக்கும் ஒருவனுக்குச் சுவர்க்கம் கிடைத்தது எப்படியென முனிவரிடம் கேட்க, நல்வினை காரணம் எனக் கூறியதைக் கேட்ட சத்தியவான் தான் அந்நல்வினை அடைய வழி கூறுமாறு கேட்டான். அதற்கு முனிவர் பரந்தாமனின் எட்டெழுத்து மந்திரத்தால் நாளும் செபிக்கச் சொன்னதன்படிச் சத்தியவான் பேறடைந்தான். இதனால் இத்திருப்பதியில் உயிர் நீத்தால் மோட்சம் கிட்டும் எனக் கூறப்பட்ட கருத்தால் வரகுணமங்கையை வணங்கி விடைபெறும் நாம், திருப்புளிங்குடி சென்று புஜங்கசயனத் திருக்கோலத்தில் பரந்தாமனைச் சேவிக்கின்றோம்.

உயிர்களின் பாவங்களைச் சுட்டெரிக்கும் கோபத்துடன் அக்கினியாய் வீற்றிருக்கும் தத்துவார்த்த பரந்தாமன் காய்சின வேந்தன் என்ற வித்தியாசமான பேர் பெற்றிருப்பதாக மீனவர் மூலவரின் விருத்தாந்தத்தைக் கூறத் தாயாராம் மலர்மகள் நாச்சியாரைக் கண்குளிரச் சேவிக்கின்றோம் !

கிடந்த கோலத்துப் புளிங்குடிப் பரந்தாமன் இந்திரனது சாபத்தை நீக்கியதோடு தன் குடும்பத்தில் தனது மனைவியரான் திருமகள், நிலமகள் இருவரின் சண்டையையும் தீர்த்து ஒன்றாய்ச் சேர்ந்திருக்கச் செய்த வைபவத்தை மீனவனார் பாமாலையில் பாட்டாகப் பாடியதைக் கதையாகக் கூறி நம்மைப் பரவசப்படுத்துகிறார்.

*இந்திரனார் சாபத்தை இத்தலத்தில் போக்கியவன்*
*முந்தித் திருமகளும் முரண்கொண்ட பூமகளும்*
*வந்தொன்றாய்ச் சேரவே வைத்திட்ட பூபாலன்*

என்பது மீனவர் வாக்கு !

ஒரு சமயம் இலக்குமியுடன் திருமால் வைகுந்தத்தைவிட்டுப் பூலோகத்தில் தாமிரபரணி நதிக்கரையில் வீற்றிருந்ததைக் கண்டு மனம் பொறாத பூமாதேவியானவள் பாதாள உலகம் சென்று மறைந்ததால் உலகம் இருளால் வறண்டதாம். இத்துன்பத்தைப் போக்கத் தேவர்களின் வேண்டுதல்படித் திருமால் பூமகளைச்

சமாதானம் செய்து கூட்டிவந்து இருதேவியருடன் காட்சி தந்தாராம் எனப் புளிங்குடி பற்றிய புராணக் கதையை மீனவர் வசனத்தில் கூறினார்.

அவ்வாறே இந்திரன் தன் மனைவி இந்திராணியுடன் இமயமலைத் தடாகச் சாரலில் வீற்றிருந்த போது கண்ட கணவன் மனைவியான மான்களில் ஆண்மானைத் தன் வச்சிராயுதத்தால் விளையாட்டாகக் கொன்றதால் ஏற்பட்ட பிரமகத்தி பாவம் புளிங்குடியில் நீங்கியதாம் என்று மீனவர் கூறப் பக்தர்களுக்குப் புளிங்குடி மீது பற்றுக் கூடுதலாகி அவரவர் வினைக்கு மருந்தாகி அருளும் பரந்தாமனைச் சேவித்தவாறு திருத்துலைவில்லி மங்கலம் என்னும் திவ்யதேசம் கண்டு தொழச் சேவாதிகள் புறப்பட்டனர்.

திருத்துலை வில்லி மங்கலம் என்ற திவ்யதேசப் பெயர் - இரண்டு பெயரை உள்ளடக்கிய ஒன்றாக உள்ளதாகும். நவதிருப்பதியின் 7ஆவதும் 8ஆவதுமான தலங்கள் ஆதிமூலப் பரம்பொருளான பரந்தாமன் தருமத் தராசுக்கும் ஞான வில்லுக்கும் தனித்தனியே அருள்பாலித்த வைபவத்தை நிகழ்த்தியதாகப் பிரம்மாண்ட புராணம் கூறும் என மீனவனார் விளக்கினார்.

மேலும் நம்மாழ்வாரின் மங்களாசாசனம் பெற்ற இத்தலங்கள் தாமிரபரணி நதிக்கரையில் உள்ளவையாகும்.

முதல் தலம் - கருந்தடங் கண்ணி உடனாய தேவர் பிரானாய்க் கிழக்கு நோக்கிய நின்ற கோலத்தில் பரந்தாமன் சேவைசாதிக்கின்றான் என மீனவர்.

*துலைவில்லி மங்கலமாய்த் தோன்றும் முதல் தலத்தில்*
*தலைவனென வீற்றிருக்கும் தனித்த புகழ்த் தேவர் பிரான்*
*கலையழகு நாச்சி கருந்தடங் கண்ணியுடன்*
*நிலைபெற்ற பெருமானை நெஞ்சத்தால் வணங்குங்கள்*

என்றார்.

இம் முதற்பாடலுக்குப் பின்னர் பாடும் பாடலில் காட்டிடையே அமைகோயில் - எனக் கோயில் உள்ள இடத்தைக் கூறுவது புதிதாக உள்ளது. ஏனெனில் நம்மாழ்வார், மணிமாடங்கள் உள்ள ஊராகப் பாடினாலும் தற்காலத்தில் ஆளரவம் அற்ற காட்டில் உள்ளதாக மீனவர் பாடுவது காலத்தை ஒட்டிய கருத்தாடலாக உள்ளது நினைக்கத் தகுவதாகும்.

மேலும் துலை (தராசு) வில்லி(வில்) எனப் பெயர் அமைந்த புராணக்கதையை மீனவர் கூறுகையில் சுப்ரபர் என்னும் முனிவர் ஒருவர் திருமாலை வழிபடத்தாம் ஓர் வேள்வி குண்டம் அமைக்க நிலத்தைச் சரி செய்தபோது ஒரு தராசும் வில்லும் கிடைத்ததாம். முனிவரின் கைபட்டதும் தராசும் வில்லும் தமது முற்பிறவியின் கதையைக் கூறின. மானாக இருந்த தங்களைக் குபேரனின் சாபத்தால் தராசும் வில்லுமாகப் பூமியில் புதைந்து தற்போது வெளிப்பட்டோம் எனக் கூறியதாய் மீனவர் சிலாகித்ததும் அவரே பரந்தாமன் பாமாலையின் மூன்றாம் பாடலில் கூறியபடி ××காடாளும் வேணியனாய்க் கையொரு வில்லோடும் கான்போந்த இராமாவதார நினைப்புடன் இத்திருத்துலை வில்லி மங்கலத்தைச் சேவாதிகள் நெஞ்சத்தால் தொழுதார்கள்.

இங்ஙனம் சேவித்த உணர்வோடு இரட்டைத் திவ்யதேசத்தின் இரண்டவதான திருத்துலைவில்லி மங்கலத்திற்குச் சென்ற சேவாதிகள், கருந்தடங்கண்ணி நாச்சியார் உடனாய செந்தாமரைக் கண்ணனாம் அரவிந்த லோசனப் பெருமாளை மீனவருடன் வணங்குகிறார்கள். முன் திருப்பதியில் கிழக்கு நோக்கிய நின்ற கோலப் பரந்தாமன் பின் திருப்பதியான திவ்ய தேசத்தில் கிழக்கு நோக்கிய இருந்தகோலச் சேவையின் அற்புத அழகைக் கண்டு சேவாதிகள் ஆராதிக்கின்றனர். இத்தலத்துப் பரந்தாமனுக்கு அரவிந்தலோசனன் என்ற பெயர் வந்ததற்கு மீனவனார் காரணம் கூறுகையில், சுப்ரபர் என்னும் முனிவர் தாமரையைக் கொண்டு அருச்சித்த அழகைக் கண்கொட்டாமல் ரசித்ததால் அரவிந்தலோசனன் எனப்பட்டானாம் என்றார். (அரவிந்தம் – தாமரை; லோசனம் –கண்) மேலும்,

*குருவின் பசுதிருடிக் குட்டத்தால் துயருற்றோன்*
*பெரிய பழிதீரவே பின்வந்து பணிந்த தலம்*

என மீனவர் இத்தலத்தில் நடந்த ஒரு கதையைச் சேவாதிகட்குக் கூறுகிறார். விபீதகன் என்பான் தன்குருவின் குரு குலத்துப் பசுவைத் திருடியதால் குஷ்ட்ட நோயால் துன்புற்றான். அவன் நாரதரின் வாக்குப்படி இத்தலத்து அசுவினி தீர்த்தத்தில் நீராட நோய் நீங்கினான் எனக் கேட்டதும் கருந்தடங் கண்ணியாம் திருமலிந்த மார்புடையானின்

திருவடிகளை வணங்கியவாறு அடுத்த திவ்ய தேசமாம் திருக்குளந்தை என்னும் பெருங்குளத்திற்குச் சேவாதிகள் மீனவர் வழிகாட்டச் சென்று மாயக் கூத்தனை வழிபடுவது பற்றி அடுத்துத் தொடர்ந்து சிந்திப்போமாக!

*(தொடரும்...)*

## சைவ நெறியே சாயி நெறி

**(இல.பழனியப்பன்)**

உலகின் முதல் வாழ்வியல் நெறியான சைவ நெறி எப்போது தோன்றியது என்பது யாராலும் அறுதியிட்டுக் கூற இயலாத ஒன்றாகும். அதன் தொன்மை உலகில் மனித வாழ்வு தொடங்கிய காலமே என்பது மட்டுமே மகான்கள் மற்றும் ஆன்மீக அறிஞர்களின் ஒருமித்த கருத்தாகும்.

உலகில் மனித வாழ்வு அறிமுகமான போது மனித உறவுகள் சீராக இல்லை. இதைக் கண்ணுற்ற இறைவன் சிவபெருமான் மக்களினம் எப்படி வாழ்ந்து உய்வடைய வேண்டும் என்று சில வாழ்வியல் நெறிகளை நமக்கு அறிமுகப்படுத்தினார். அதுவே சைவ நெறி. பின்னர் அந்த வழியை நமது முன்னோர்கள் ஏற்று அற்புதமாக வாழ்ந்து காட்டினார்கள். இறைவனின் அருளைப் பெற்றார்கள்.

உலகில் ஆயிரக்கணக்கான ஆன்மீக, சமய நெறிகள் அன்று முதல் இன்று வரை உலாவந்து கொண்டேயிருக்கின்றன. ஆனால் அவற்றில் விரல்விட்டு எண்ணக் கூடிய வகையில் ஒருசில மட்டுமே உயிரோடு இன்றளவும் இருக்கின்றன. கால மாற்றத்திற்கு ஏற்ப என்றும் வாழ்க்கையை முழுமையாக வாழ்ந்து மனித குலம் உய்வடையச் சைவ நெறியால் மட்டுமே இன்றளவும் முடிகிறது.

மனித வாழ்வில் சோதனை ஏற்படும்போது அதை எதிர்கொள்ள மனித குலத்திற்குச் சுதந்திரமாகச் செயல்படக் கருத்துரிமை கொடுத்துள்ள ஒரேநெறி நமது சைவ நெறியே.

இன்று உலகளாவிய ஒன்றை நமது என்று உரிமையுடன் நாம் சொல்வதற்குக் காரணம் உலகில் சைவநெறி தோன்றியது நமது தமிழ்நாட்டில் தான் என்ற தன்னுணர்வே காரணம் ஆகும். சேக்கிழார் குமரகுருபரர் போன்றவர்களின் படைப்புக்கள் இதை உறுதி செய்கின்றன.

மனித உயிரினம் மட்டுமின்றி மற்ற உயிரினங்களான விலங்குகளும் பறவையினமும் ஆகியவற்றிலும் இறைவன் உள்ளார் என்ற சமத்துவ உணர்வை உணர வைத்த ஒரே நெறி சைவ நெறியே. ஆனால் மக்கள் சைவ உணவு மற்றும் அசைவ உணவையே சைவ நெறியின் தாத்பரியங்களாகத் தவறாகவே காண்கிறார்கள். ஆனால் சைவ நெறி உணவின் மூலம் அதாவது சாத்விக உணவின் மூலம் மனிதனை மனித நிலையில் வாழவைக்கிறது என்பது இன்றளவும் நாம் கண்கூடாகக் காணும் உண்மையாகும். சைவ நெறியினைத் தொடர்ந்து இன்று உலகளாவிய அளவில் சீரடி சாயி பக்தி இயக்கம் மிக வேகமாகப் பரவி வருகிறது. நமது தமிழ் நாட்டிலும் பரவி வருகிறது. அந்த இயக்கம் சைவ நெறியின் மறுவடிவமே என்பதை நாம் ஆழ்ந்து ஒப்பிட்டுப்பார்த்தால் எளிதில் விளங்கும்.

இந்த உலகில் நம்மைப்படைத்து வாழவைத்து, பின்னர் இறைநிலை அடையச் செய்யும் இறைவன் ஒருவனே. அவனை எந்த வடிவத்தில் வேண்டுமானாலும் வழிபடுங்கள். ஆனால் அந்த மாசற்ற சோதியை நம்பிக்கையோடு வழிபடுங்கள் என்று நமது சைவ நெறி சொல்வதைத்தான் இறைவனின் வடிவாக அவதரித்துள்ள சத்குரு சாயிநாதரும் இறை அனுபூதியாக நமக்குத் தருகிறார். ஒவ்வொரு கால கட்டத்திலும் உலகில் தீமைகளை ஒழித்து நன்மைகளை நிலைநாட்டப் பல்வேறு அவதாரங்களாக மகான்கள் வந்து ஒவ்வொரு கால கட்டத்திலும் உலாவந்து ஊசலாடும் நமது மனத்தை ஒருநிலைப்படுத்தி நம்மை வழிநடத்துகிறார்கள். இந்தப் பல்வேறு வடிவங்களின் மொத்த உருவமே சீரடி சாயிநாதர்.

இந்துவாகப் பிறந்து இசுலாமிய நாட்டில் குருவாக ஏற்று வளர்க்கப்பட்ட சாயிநாதர் மதவெறிகளைப் போக்கி மக்களை அறியாமை இருளில் இருந்து காப்பாற்றிய வள்ளலார் ஆவார். நமது வள்ளலாரைப் போல நீர் ஊற்றி விளக்கு எரிய வைத்த மகான் சித்தர் பாபாவே. மனித வாழ்வின் நிலையாமையை வலியுறுத்த அவர் கையாண்ட வழிமுறைகள் ஏராளம் ஏராளம்.

சிவம் என்னும் சைவ நெறி தமிழ்நாட்டில் தான் தோன்றியது. அதை உருவாக்கிய ஆன்மீகச் சித்தர்கள் பெருந்தன்மையோடு இந்த உலகம் உய்யப் பாடுபட்டனர். சைவநெறி வளரப் பாடுபட்ட ஆதிசங்கரர்

மற்றவர்களைத் தமது நெறியாக ஏற்கச் செய்தார். அதனால் அது வளர்ந்தது. ஏன் இன்றும் வளர்ந்து கொண்டுதான் இருக்கிறது. அதே பாதையில் இறைவன் அருளால் இன்றளவும் சாயிநாதர் நமது சைவநெறி முறைகளை மக்களை ஏற்க வைக்கிறார். மனித வாழ்வு நிலையற்றது; என்றாவது ஒருநாள் அதற்கு முடிவு உண்டு. இது உலகளாவிய உண்மை. அதனை உணர்த்தச் சாம்பலாகிய திருநீற்றை மக்களுக்குப் பிரசாதமாக ஊதி என்ற பெயரில் அளித்து வழிநடத்துகிறார் பாபா. திருநீறே – ஊதி என்ற பெயரில் பக்தர்களாகிய மக்களின் லோகாயுதத் தேவைகளைப் பூர்த்தி செய்கிறது.

நம் சைவ நெறி மகான்கள் நோயுற்றவர்களுக்குத் திருநீற்றையே மருந்தாகக் கொடுத்து நோய்தீர்ப்பதுபோல் பாபாவின் விபூதியாகிய ஊதி பல உடல் மன நோய்களை இன்றளவும் போக்கி வருகிறது. பாபாவின் மிகச்சிறந்த அடியாரான தாங்கனு மகராஜ் தனது துதிப் பூங்கொத்தாகிய சாயி ஸ்தவன மஞ்சரியில் நீங்கள் சந்திரன் கங்கை முதலான ஐந்து முகங்களை உடைய சங்கரர் மண்டை ஓடுகளை மாலையாக அணிந்த மகேசுவரர் நீலநிறமான கழுத்தை உடையவர் எங்கும் நீக்கமற நிறைந்து விளங்குபவர் என்று குறிப்பிடுவது பாபா சிவனாரின் அவதாரம் என்பதைத்தானே கூறுகிறது.

மேலும் நீங்கள் பிறப்பு இறப்பு அற்றவர் என்பதும் இக்கருத்துக்கு மேலும் வலுவூட்டுகிறது. தர்மம் அழிந்து அதர்மம் தலையெடுக்கும் போதெல்லாம் என்னை நானே அவதரித்துக் கொள்கிறேன். நல்லோரைக்காத்து, தீயோரை அழிக்க யுகந்தோறும் அவதரிக்கிறேன் என்று கீதையில் பகவான் கூறுகிறார். பாபா ஒருபக்கம் நல்லோரைக் காப்பதுடன் தீயவர் மீது அனுதாபம் கொண்டு ஒருபடி மேலே போய் அவர்களைத் திருத்தி ஆன்மீகப் பாதைக்கு அழைத்துச் சென்று நல்வழிப் படுத்துகிறார். சைவநெறிப் பார்வையின் அன்பு கருணை ஆகியவையே இன்று உலகளாவிய ஆன்மீக விழிப்புணர்வுக்குக் காரணமாய் அமைந்திருப்பது நமக்கெல்லாம் பெருமையே. சைவ நெறி காட்டிய அமைதி வழிப் போராட்டமே நமது நாட்டிற்குப் பூரண சுதந்திரத்தைப் பெற்றுத் தந்தது. அது அந்நியர்களை மனம் மாற வைத்தது. இல்லாவிடில் அவர்களின் படை பலத்துடன் நாம் பேராடி வெற்றி காண முடிந்திருக்குமா சிந்தித்துப் பாருங்கள்.

சீரடி பாபா இம்மண்ணுலகில் வாழ்ந்த காலத்தில் அவரது ஸ்சவ நெறி அணுகுமுறையைத் தேசியப் போராட்டத் தலைவர்களான கோகலே திலகர் ஆகியோரை ஏற்றுக்கொள்ள வைத்ததால் தான் கத்தியின்றி இரத்தமின்றி நமது யுத்தம் தொடர்ந்து நடந்து மனித இழப்புக்கள் குறைவோடு வெற்றி தேடித்தந்தது; பாபா காட்டிய சைவநெறி உலகில் ஆன்மீகப் பார்வையாகப் பார்க்கப்பட்டது. சைவ நெறியின் கொல்லாமை அணுகுமுறையே சமணர்களை முதன்மையானதாகப் பின்பற்ற வைத்தது.

சைவர்களுடன் போரிட்டு வாழ்ந்த சமணர்கள் தெரிந்தோ தெரியாமலோ சைவ நெறியின் ஆதார வாழ்வியல் கொள்கையான எவ்வுயிருக்கும் தீங்கு செய்யாமை என்ற உயர்ந்த அறத்தையே பின்பற்றி இன்றுவரை வாழ்கின்றனர். சைவ நெறி மனித வாழ்வின் தேவைகளைக் குறைக்க வழிகாட்டுகிறது. பேராசை பொறாமை வன்முறை ஆகியவற்றிற்கு எதிராக அடக்கத்துடன் பணியாற்றி வரும் சைவ நெறியின் ஆற்றலையே பாபா உடலை நீக்கும்வரை வலியுறுத்தி வாழ்ந்தார் என்பதும் நாம்உணர வேண்டிய உண்மையாகும்.

உடலையும் மனதையும்பேணி வீடுபேறு எய்த வலியுறுத்திய சைவ நெறி உடல்மீது பற்றுக்கொண்டு செயல்படும் சுயநலப் போக்கினை அறவே இன்றுவரை எதிர்க்கிறது. அதையேதான் சத்குரு சாயிநாதரும் உடல் மனம் உள்பட அனைத்திலும் விருப்பு வெறுப்பின்றி வாழ நமக்கு வழிகாட்டியுள்ளார். ஆகவே சைவநெறியின் மறுவடிவே சாயிநெறி என்பது மறுக்க முடியாத பேருண்மையாகும். சைவநெறியின் அடிப்படைக் கோட்பாடுகளை முன்வைத்து அன்றுவளர்ந்த இந்து சமயம் இன்று சற்று திசை மாறிப் போய்க்கொண்டிருப்பதும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டிய ஒன்றாகும். சில சுயநல ஆன்மீகவாதிகள் உலகெலாம் ஓதி உணர்ந்த ஒப்பற்ற சிவபெருமானின் மனித நேயக் கொள்கைகளை மறந்து செயல்படுகிறார்கள். காலம் கட்டாயம் அவர்களுக்குப்பாடம் புகட்டும்.

மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்

என்ற கந்த புராணம் தந்த கச்சியப்ப சிவாச்சாரியார் அருள்வாக்கின்படி இன்று உலகையே சைவநெறி காத்துக்கொண்டிருக்கிறது. அந்தப்

பாதுகாப்புத்தரும் சைவ நெறியாளர்களில் தலையானவர் சீரடி சாயிநாதர் ஆவார். சமயங்கடந்த சாதி மதம் இனம் கடந்த ஈசன் இந்த உலகில் அலகிலா விளையாட்டு ஆடிக்கொண்டிருக்கிறார். அந்த விளையாட்டில் நாம் எல்லாம் சிறு துரும்பே. ஆகவே சைவநெறியும் சாயிநெறியும் ஒன்றேன உணர்ந்து இறை அனுபூதி பெறுவோம் வாழ்வில் உய்வடைவோம்.

## உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே

(புலவர் மாமணி ஆறு.மெ.மெய்யாண்டவர்)

முன்னுரை

உலக இலக்கியங்களைப் போல் தமிழில் சங்க இலக்கியங்கள் நிலைத்த புகழுக்குரியவை. தமிழ் இலக்கியங்களின் இமயம் சங்கப் பாடல்கள். காதலையும், வீரத்தையும் இரு கண்களெனப் போற்றினர் தமிழர். மனம் ஒத்த தலைவனும், தலைவியும் இணைந்து வாழ்ந்த வாழ்க்கையைப் பேசுவன இப்பாடல்கள். மன வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டவை. போர், வெற்றி, கொடை, நாட்டு நடப்பு, வாழ்க்கையின் குறிக்கோள் இவை பற்றியெல்லாம் பேசுவன புறப்பாடல்கள். தமிழ்நாட்டு வரலாற்றை அறியப் புறப்பாடல்கள் பெரிதும் துணை புரிகின்றன. மேலே குறிப்பிட்ட தலைப்புகளில் கொடை பற்றிய சிறப்பை உணர்த்துவதே 18ஆம் புறநானூற்றுப் பாடலின் சாரமாகும்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் போற்றிக் குடபுலவியனார் பாடியது.

திணை – பொதுவியல்

எல்லாத் திணைகளுக்கும் பொதுவான கருத்துக்களைக் கூறுவது

துறை – முதுமொழிக் காஞ்சி

அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பொருள்களின் உறுதிப்பாடுகளை உணர்த்துவது. அப்பாடலின் சில வரிகள் இதோ

*முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்*
*பரந்துபட்ட வியன்ஞாலம்*
*தாளின் தந்து தம்புகழ் நிறீஇ*
*ஒரு தாம் ஆகிய உறவோர் உம்பல்*

*ஒன்றுபத்து அடுக்கிய கோடி கடை யிரீஇய*
*பெருமைத்து ஆகநின் ஆயுள்தானே*

ஒலிக்கும் கடலால் முழுவதும் சூழப்பெற்றுள்ள பரந்து அகன்ற இவ்வுலகத்தைத் தம் முயற்சியால் வென்று, தம் புகழை நிறுத்தித் தாமே ஆண்ட மன்னர் வழியில் வந்த நெடுஞ்செழியனே! ஒன்றைப் பத்து முறையாக அடுக்கப்பெற்ற கோடி என்ற எண்ணைக் கடைசி எண்ணாகக் கொண்ட சங்கு முதலான பேர் எண் அளவில் நின் வாழ்நாள் நிறைந்து விளங்குவதாகுக எனப் பாண்டிய மன்னனைப் பாராட்டிவிட்டு, அடுத்து, சில பாடல் வரிகளில் பின்வருமாறு குடபுலவியனார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் வரிகள் இதோ ....

*மல்லன் மூதூர் வயவேந்தே*
*ஞாலம் காவலர் தோள்வலி முருக்கி*
*ஒருநீ ஆகல் வேண்டினும் சிறந்த*
*நல்இசை நிறுத்தல் வேண்டினும் மற்றதன்*
*தகுதி கேள்இனி மிகுதி யாள*
*நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோரே*
*உண்டி முதற்றே உணவின் பிண்டம்*
*உணவெனப் படுவது நிலத்தோடு நீரே*
*நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு*
*உடம்பும் உயிரும் படைத்திசி னோரே*
*வித்திவான் நோக்கும் புன்புலம் கண்ணகன்*
*வைப்பிற்று ஆயினும் நண்ணி ஆளும்*
*இறைவன் தாட்குஉதவ வாதே அதனால்*
*அடுபோர்ச் செழிய இகழாது வல்லே*
*நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்*
*தட்டோர் அம்ம இவண்தட் டோரே*
*தள்ளா தோர்இவண் தள்ளா தோரே*

வானமும் அஞ்சத்தக்க நீண்ட மதிலும் வனப்பும் கொண்ட மதுரை மூதூர் மன்னனே, நீ செல்ல வேண்டிய மறுமை உலகத்தில் அனுபவிக்கும் செல்வத்தை விரும்பினாலும், அதே நேரத்தில் தோள் வலிமையால் இவ்வுலகில் பிற மன்னரை வென்று புகழ் பெற

விரும்பினாலும் அதற்கு வழி கூறுகிறேன். கேட்பாயாக, என, குடபுலவியனார் பின்வருமாறு கூறுகின்றார். சான்றோனே, நீரை அடிப்படையாகக் கொண்டே நம் உடம்பை உயிர் தாங்கி நிற்கின்றது. நீரை முக்கியமாகக் கொண்டுள்ள உடம்புக்கெல்லாம் உணவைக் கொடுத்தவர், உயிரைக் கொடுத்தவராவர். உடம்பு உணவை முதலாக உடையது. எனவே இங்கு உணவு என்று சொல்லப்படுவது நிலத்தோடு கூடிய நீரே ஆகும். அந்த நீரையும், நிலத்தையும் ஒன்றாகச் சேர்த்தவர் இவ்வுலகில் உயிரையும், உடலையும் படைத்தவர் ஆவார். நெல் முதலானவற்றை விதைத்து, மழையை எதிர்நோக்கிக் காத்திருக்கும் புல்லிய புன்செய் நிலம் இடம் அகன்றதாயினும், அதை ஆளும் மன்னன் எந்தச் செயலைச் செய்தாலும் பயனில்லை. ஆதலால் வெல்லும் போர்த் தொழிலைச் செய்யும் செழியனே, நான் கூறிய இக்கருத்தைக் கடைப்பிடித்து, விரைவாய் அகன்ற புன்செய் நிலம் அமைந்துள்ள பள்ளமான இடத்திலெல்லாம் நீர் நிலை பெருகும் படி செய்வாயாக. ஏனென்றால் அப்படி நீரைக் கூட்டி நீர் வளத்தைப் பெருக்கியவர், தாம் செல்லும் மறுமை உலகத்திற்குச் செல்வம் முதலானவற்றைக் கொண்டு செல்வதற்கு இணையாக இவ்வுலகத்தில் வாழும் மக்களுக்கு உடலுக்கு உயிரைக் கூட்டியவராவார். தாம் செல்லும் உலகில் கிடைக்கும் செல்வம், புகழ் யாவையும் இங்கேயே பெற்றுவிடலாம்., என்கிறார் குடபுலவியனார்.

பள்ளமான இடங்களை உருவாக்கி நீர் நிலைகளைப் பெருக்கினால், அதாவது (அணைக்கட்டுகளைக் கட்டி, நீரைத் தேக்கினால்) (சான்று கரிகாலன் கட்டி வைத்த கல்லணை) மக்கள் உணவுப் பஞ்சம் இன்றி, உழைத்து உண்டு பசி நீங்கி வாழ்வர் என்ற இயற்கை நிலவியல் அறிவியலைக் குடபுலவியனார் பாடிய இப்பாடல் மூலம் அற்புதமாக விளக்குகிறார். உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே எனும் இவ்வரி உணவை உற்பத்தி செய்து, உண்பதற்கு வழிகாட்டும் மன்னனாக ஏ பாண்டிய மன்னா நீ மாறிவிடு தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனே நீ பகைவர்களை வெல்வதை விட, மக்கள் பசி என்னும் பகைவரை வெல்ல மக்கட்கு வழிகாட்டி, (உண்டி உணவை ஆக்கும் வழியை நீ காட்டினால்) நீ மக்களுக்கு உயிர் கொடுத்தோன் ஆகிவிடுவாய். மணிமேகலைக்

காப்பியத்தில் பசியோடு வாடும் ஏழை மக்களிடம் சென்று, அமுதசுரபியிலிருந்து உணவை வழங்குகிறாள் மணிமேகலை. அப்போது சுதமதி என்ற அவளது தோழி கேட்கிறாள் இலவசமாக உணவு கிடைக்கிறது என்றால், அது அவர்களை முடமாக்கிவிடாதா? மணிமேகலை என்று சுதமதி வினவுகிறாள். உடனே மணிமேகலை நான் வீணருக்கு உணவளிப்பதில்லை, வறியவர்க்கும், ஆதரவற்றோருக்கும், உடலில் குறைபாடு உள்ளவருக்கும் மட்டும்தான் உணவை அளிக்கிறேன். உடனே சுதமதி சொல்கிறாள், மணிமேகலை சிறையில் கைதிகளெல்லாம் உணவின்றி வாடுகிறார்கள். அவர்களுக்குச் சென்று மாவண்கிள்ளி என்ற (மணிமேகலை காலத்து) மன்னனிடம் அனுமதி பெற்று, சிறைக் கைதிகளுக்கு உணவு வழங்குவாயாக, என்று சுதமதி சொன்னதும், அதை ஏற்றுக்கொண்ட மணிமேகலை சிறைக்கோட்டத்தை அறக்கோட்டமாக மாற்றினாள். அதனால் அவள் பசிப்பிணி மருத்துவி என்று சித்தரிக்கப் பெற்றாள். 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் திருவருட் பிரகாச வள்ளலார் வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினார். வீடுதோறும் இரந்தும் பசியறா வெற்றரைக் கண்டுள்ளம் பதைத்தார். ஈடில் மானிகளாய், ஏழைகளாய் இளைத்தவர் தமைக்கண்டு இளைத்தார், அதனால்தான் 1867-இல் வடலூரில் சத்திய தருமச் சாலையை நிறுவினார். சன்மார்க்க நெறி கண்டார். இந்த சத்திய தருமச்சாலையில் இப்பொழுதும் எப்பொழுதும் மூன்று வேளையும் கண் இழந்தோர், கால் முடமுற்றோர், வயதில் மூத்தோர் இவர்கள் எல்லோரும் பசியாற உண்ண வழிவகுத்துள்ளார் திருவருட்பிரகாச வள்ளலார் என்ற வடலூர் இராமலிங்க அடிகளார். வடலூர் சத்திய தருமச் சாலை எல்லோருக்கும் பசி போக்கும் அறநிலையமாக நிரந்தரமாகத் திகழ்ந்து வருகிறது. ஆனால் இவற்றுக்கெல்லாம் முன்னோடியாக உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே என்ற புறப்பாடல் மூலம் உழைத்து உண்டு வாழ வேண்டும் என்ற பொருள் தரும் அற்புதமான கருத்து நிறைந்த பாடலைக் குடபுலவியனார் நம் நாட்டுக்கு, தமிழ் மண்ணுக்கு இல்லையில்லை உலகிற்கே கொடையாகத் தந்துள்ளார்.

# அதிசயமாய் வாழ்ந்த அன்னை

பேராசிரியர் மு.பழனி இராகுலதாசன்

1

எல்லோரும் வாழப் பிறந்தவர்கள்தாம்; எனினும் எல்லாருடைய வாழ்க்கையும் வரலாறாக ஆவதில்லை. ஒரு சிலரே பிறந்து, வாழ்ந்து வரலாறாகவும் ஆகி, வழிகாட்டிகளாகவும் அமைகின்றனர். அப்படிப்பட்ட வரலாறுகளில், ஆற்றல் செறிந்தனவாகச் சில அமைகின்றன; அதிசயிக்கத் தக்கனவாகச் சில அமைகின்றன; அன்னை சாரதாமணி தேவியின் வரலாறு அதிசயிக்கத் தக்க வரலாறு ஆகும்.

2

மேற்கு வங்காளத்தில் பாங்கூரா என்னும் மாவட்டத்தில் ஜெயராம்பாடி என்னும் சிற்றூரில் ஓர் ஏழை அந்தணர் குடிசையில், இராமச்சந்திர முகோபாத்யாயர் – சியாமா சுந்தரி ஆகிய பெற்றோர்க்கு முதலாவது மகளாக, சாரதாமணிதேவி பிறந்தார் என்பதில் அதிசயமில்லை; இந்திய மண்ணில் பிறந்து, பொம்மைகளோடு விளையாடித்திரிந்த எத்தனையோ குழந்தைகளைப் போல, இவரும் விளையாடித் திரிந்ததிலும் அதிசயமில்லை; வீட்டில் மூத்த புதல்வியாகப் பிறந்துவிட்ட முக்கியத்துவம் கருதி, தமக்குப் பின் பிறந்த தம்பிகளைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டதிலும் அதிசயமில்லை; தந்தை சொல் கேட்டு, வயல்வெளிப்பக்கம் சென்று, நெல் அறுவடை வேலைகளைச் செய்து வந்ததிலும் அதிசயமில்லை; இராமகிருஷ்ணருக்கும் தமக்கும் நடந்த திருமணத்தின் போது, தமக்கு அணிவிக்கப்பட்டவை இரவல் நகைகள் என்று அறிந்த வேளையில், விம்மி, விம்மி, அழுததில் அதிசயமில்லை; பால்யப் பருவம் கழித்து, இளமைப் பருவத்தில், சந்தித்துக் கொண்ட போது, பரமஹம்சர், சாரதாதேவியிடம், உன் மனத்தில் இருப்பதை மறைக்காமல் சொல்லிவிடு என்று கேட்க, சிறிதும் தயக்கமின்றி, உலகியலுக்கு உங்களை இழுக்கும் எண்ணம் எனக்கு இல்லை; உங்களது ஆன்மிகத்துறையில் உங்களுக்குப் பணி செய்யவே வந்திருக்கிறேன். என்று தெளிவுபட மொழிந்தாரே, அதுதான் அதிசயம்! உலகில் வேறு எந்தத் தம்பதியரிடமும் நடைபெற்றிராத அதிசயம்! சாரதாதேவியாரிடம்

அமைந்திருந்த இந்த அதிசயம், பரந்துபட்ட இந்த உலகத்தில் வேறு எந்தத் தம்பதியரிடமும் நடைபெற்றிராத அதிசயம்! இத்தகைய அதிசய மனப்பரிபாகம் இராமகிருஷ்ணரிடம் ஏற்கனவே அமைந்திருந்த மனப்பரிபாகத்திற்கு இணையானது. அதுவே கால ஓட்டத்தில் இராமகிருஷ்ணரின் தவவலிமைக்கு வலிமை செய்தது. படகு தனியே இருப்பதில் என்ன பயன்? படகோட்டி ஒருவன் வரவேண்டும் அல்லவா! படகு - படகோட்டி என்ற உருவகம் இராமகிருஷ்ணர் - விவேகானந்தர் சந்திப்புக்காகச் சொல்லப்படும் மிகவும் புகழ்பெற்ற உருவகம்; அந்த உருவகத்தை இங்கே பரமஹம்சருக்கும் - அன்னை சாரதாமணி தேவியாருக்கும் நிகழ்ந்த சந்திப்புக்காகவும் நினைவுபடுத்திக் கொள்ளலாம். இந்த அதிசய அற்புதமான வாழ்வியலை முழுதுமாக உள்வாங்கிக் கொண்ட அறிஞர் ரோமன் - ரோலண்டு "Both Equally Chaste and Equally Passionate" என்று குறிப்பிட்டு எழுதினார்.

3

இந்தியப் பெண்மைக்கு மரபார்ந்த ஒரு விருப்பம் உண்டு; அது காலம் காலமாகக் கனிந்து உருவாகிய விருப்பம் ஆகும். அதாவது நான் பூவோடும் பொட்டோடும் போய்ச் சேரவேண்டும் என்பதே அது. அவர் இருக்க வேண்டும், அவர் மடியில் நான் தலைசாய்த்துப் போகவேண்டும்; எனது இறுதிப் பயணத்துக்கு அவர் இருந்து அவரே காரியங்கள் செய்து அனுப்பி வைக்க வேண்டும்; இதுதான் இந்தியப் பெண்மையின் ஆசை. இத்தகைய இந்தியப் பெண்மையின் புனிதமான ஆத்மார்த்தமான ஆசைக்கு அன்னை சாரதையின் நெஞ்சம் விதி விலக்காக இருக்க முடியாது அல்லவா! ஆனால் அது அன்னை சாரதைக்கு அமையவில்லை. பரமஹம்சர் முந்திக் கொண்டுவிட்டார். அம்மா, என் தாயே என்னை விட்டுவிட்டு எங்கே சென்றீர்கள் என்று அவலம் கொண்டு மாழ்கினார். நிகழ்ந்துவிட்ட அவலத்தை யாரால் மாற்ற முடியும்? பரமஹம்சரே நேருக்கு நேரே தோன்றினார்; தோன்றிப் பேசினார்; நீ என்ன பேசுகிறாய்? நான் மாய்ந்து போய்விடவில்லையே!... ஓர் அறையிலிருந்து மற்றோர் அறைக்குப் போயிருக்கிறேன்; நீ விதவைக் கோலம் மேற்கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். இந்திய ஆன்மிக வரலாற்றில் ஓர் அற்புதமான இடம் இது; எழுத்துக்கும் சொல்லுக்கும் அப்பாற்பட்ட ஆன்ம பூர்வமான இடம்.

4

எல்லாம் ஒளியான பிறகு இருள் ஏது? மருள் ஏது? இந்த அற்புதமான இடத்தை ஓரளவாவது புரிந்து உள்வாங்கிக் கொள்ள, மகாகவி பாரதி பாடிய இருள் என்பது பாதி ஒளி என்ற மணிவாசகத்தை நினைவு படுத்திக் கொள்ளலாம்.

பரமஹம்சர் மறைந்த பிறகு நிகழ்ந்த - அன்னை சாரதையின் வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்கள், அதிசயங்கள் ஒன்றா? இரண்டா? ஆயிரம் ஆயிரம் நிகழ்ந்தன; ஒருமுறை பக்கத்துக் கிராமமக்கள் ஒன்று திரண்டு ஓடிவந்தனர். எங்கள் வயலில் இப்போது தான் நாற்று நட்டு வைத்திருக்கிறோம்; வானம் இருண்டு மழை கொட்டப் போவது போல் இருக்கிறது; மழை கொட்டினால் நட்டு வைத்த நாற்றுக்கள் எல்லாம் வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போய்விடும்.. என்று அச்சத்துடன் அன்னை சாரதையிடம் முறையிட்டார்கள். அம்மாவின் மனம் பதைபதைத்து இளகிவிட்டது. வீட்டுக்கு வெளியே வந்து வானத்தைப் பார்த்து என் மக்கள் பயப்படுகிறார்களே, ஏன் இப்படிப் பயமுறுத்துகிறாய்? என்று மட்டும் வானத்திடம் விண்ணப்பம் செய்து கொண்டார்கள்; அன்னையின் விண்ணப்பம் கேட்டு வானத்து மேகங்கள் கலைந்து போயின; கிராமத்து மக்களின் மகிழ்ச்சியைச் சொல்லவா வேண்டும்!

அதே பாங்கில் இன்னொரு அற்புத நிகழ்வு; இப்போது மழைபெய்ய வில்லை; கடுமையான வறட்சி; வயல் வெளியில் நட்டுவைத்த பயிர்கள் எல்லாம் வாடி வதங்கிப் போய்விடக் கூடிய சூழ்நிலை; அந்தப் பகுதி விவசாயப் பெருங்குடி மக்கள் திரண்டு வந்து முறையிட்டனர். இது என்ன சோதனை! என்று அன்னை சாரதை வானத்தை நோக்கி முறையிட்டார். பெய் எனப் பெய்யும் மழை என்ற கவிவாக்கு பலித்தது.

5

அன்னையின் அன்புக்கு அடைக்கும் தாழ் இருக்கக் கூடுமா? எத்தனையோ நிகழ்வுகளில் இஸ்லாமிய இளைஞன் அம்ஜித் என்பவனுக்குக் காட்டிய அன்பு - பேரன்பு - எழுத்துக்கு அப்பாற்பட்டது. இளைஞன் அம்ஜித் தீய பழக்கங்களால் ஊர் சுற்றுபவனாகவும், காவலர்களால் தேடப்படுபவனாகவும் திரிந்து அலைந்தான். அங்கும்

இங்கும் பசியோடு அலைந்து திரிந்து ஒருநாள் ஆஸ்ரமத்துக்குள் நுழைந்துவிட்டான். ஆஸ்ரமத்தில் இருந்த பெண்கள் பயந்தார்கள். அம்ஜித் பசியோடு வந்திருக்கிறான்; உணவு பரிமாறுங்கள் என்று அன்னை உத்தரவிட்டார்; அன்னையின் உறவுக்காரப் பெண் உட்பட எல்லோரும் தயங்கினார்கள்; பயந்தார்கள். எட்டி நின்று பரிமாறினார்கள்; அன்னை சாரதாமணி தேவிக்குக் கோபம் வந்துவிட்டது. பசியோடு வந்த பிள்ளைக்கு உணவு பரிமாறுகிற விதமா இது. தள்ளிப் போங்கள் என்று உத்தரவிட்டுத் தானே பரிமாறினார்; தானே இலை எடுத்துப் போட்டார்; கைகழுவத் தண்ணீர் ஊற்றினார்; அது மட்டுமா? அம்ஜித்தை நோக்கி, மகனே தயங்காதே, உனக்கு எப்போதெல்லாம் பசிக்கிறதோ அப்போதெல்லாம் வா, வந்து சாப்பிட்டுப்போ என்று அன்போடு உரைத்தார். அடுத்து மொழிந்த வாசகங்கள் அபூர்வமானவை. அம்ஜித் மீது வெறுப்புக்காட்டிய ஆஸ்ரமத்துப் பெண்களைப் பார்த்து, அம்ஜித் யார் என்று நினைக்கின்றீர்கள், அவன் சரத்தைப் போலவே என்னுடைய மகன் என்றார். இந்திய ஆன்மிகத்தின் சிகரவாசகங்கள் இவை.

6

ஆழிப்பேரலையின் அக்கரை நமக்குத் தென்படுவதில்லை; இக்கரை மட்டும் நமக்கு முழுவதுமாகப் புலப்பட்டு விடுகிறதா என்ன? இக்கரையில் நிற்கும் போது நமது கைகளில், பாதங்களில் அலைகள் மோதும் போது ஏதோ ஒருவகைச் சிலிர்ப்பு; அவ்வளவுதான்! அப்படித்தான் அன்னை சாரதாமணி தேவியாரின் வாழ்க்கை நிகழ்வுகளை அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பார்த்துச் சிலிர்ப்படைந்து போகிறோம். இக்கரையில் நின்று, குனிந்து, இரு கைகள் குவித்துச் சாகரத்தின் சிலதுளிகளை அள்ளிக் கொள்வது போல் அன்னை சாரதை - சகோதரி நிவேதிதா என்று சிறுதுளிகளை அள்ளிக் கொள்கிறோம்; அந்தச் சிறுதுளிகள் சாகரத்தின் மிகச்சிறிய அடையாளங்கள்; அடையாளங்கள் எல்லாருக்குமா புரிந்து விடுகின்றன? அருளுக்கு நிவேதனம் - என்று எட்டயபுரத்தானுக்குத் தானே முதன் முதலில் புரியவந்தது!

அன்னை சாரதை - அருமை மகள் நிவேதிதை என்ற உறவு எதன்பாற்பட்டது? சொல்லவோ, எழுதிக்காட்டவோ நம்மால்

இயலுவதில்லை. வியப்பின் எல்லையில் அந்தப் புனிதமிகு வரலாறு நம்மை நிறுத்திவிட்டு நகர்ந்து, நகர்ந்து போய்விடுகிறது.

மார்கரட் எலிசபெத் நோபிள் என்ற மேலைநாட்டுப் பெண்ணும் சாரதாமணிதேவி என்ற கீழைநாட்டு அன்னையும் சந்தித்துக் கொண்ட முதலாம் சந்திப்பு உலக ஆன்மிக வரலாற்றில் மிக உயரத்தில் வைக்கப்பட்டு, காலங்காலத்துக்கும் ஞான ஒளி வீசும் உன்னதமான வரலாறு ஆகும்.

அன்னை சாரதாமணிக்கும், நிவேதிதாவுக்குமான முதன் முதல் சந்திப்புக்கு, சுவாமி விவேகானந்தர் ஏற்பாடு செய்திருந்தார். அன்னை கிராமத்துப் பெண்; நிவேதிதா மேலை நாட்டுப்பெண்; முதன் முதல் சந்திப்பின் போது என்ன நிகழுமோ என்ற சிறிது அச்சம் சுவாமி விவேகானந்தருக்கு இருக்கத்தான் செய்தது; அறிமுகம் செய்து வைக்கும் பணி, விவேகானந்தரின் சீடரான சுவாமி சுவரூபானந்தருக்கு இடப்பட்டது. அன்னை மிகவும் மகிழ்ந்து உன் பெயர் என்னம்மா? என்று கேட்டார். என் பெயர் மார்கரட் எலிசபெத் நோபிள் என்றார் நிவேதிதை. அதற்கு அன்னை சாரதை மகளே, இவ்வளவு பெரிய பெயரை என்னால் நினைவில் வைத்துக் கொள்ள முடியாது, மகளே என்று கூப்பிட்டுக் கொள்கிறேன் என்றார். சரி, அது தான் சரி, நான் உங்கள் மகள் தான் என்றார் நிவேதிதா; இந்தச் சந்திப்புப் பற்றி சுவாமி விவேகானந்தரிடம் தெரிவிக்க வேண்டுமே; நிவேதிதா தெரிவித்த பாங்கும் பணிவும் எழுத்துக்கு அப்பாற்பட்டவை. அன்னை என் தலைமீது கைவைத்து ஆசீர்வதித்தார்; பாதங்களைத் தொட்டு வணங்க அனுமதித்தார்; மகளே என்று கூப்பிடுவதாகக் கூறினார் என்று நிவேதிதா சுவாமி விவேகானந்தரிடம் தெரிவித்தார்.

இவை சாகரங்களின் சந்திப்பு; நாம் முழுதுமாக உள்வாங்கிக் கொள்ள இயலாத சந்திப்பு; நமக்குப் புரிவதெல்லாம் சாகரங்கள் சந்தித்துக் கொண்டன என்பது மட்டுமே. இந்த, இப்பிறவியில், நமக்கு இது மட்டும் போதும் தானே!

# திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## படைமாட்சி

(மன்னனுக்குரிய படையின் சிறப்பு)

**1. உறுப்புஅமைந்து ஊறுஅஞ்சா வெல்படை வேந்தன்**
**வெறுக்கையுள் எல்லாம் தலை.**

உறுப்புஅமைந்து - படைகளின் வகையான யானைப்படை, குதிரைப் படை, தேர்ப்படை, காலாட்படை என்னும் பகுதிகளால் பொருந்தி; ஊறு அஞ்சா - பகைவரால் வரும் தீங்குக்கு அஞ்சாத; வெல்புடை - வெல்லுகின்ற படைகள்; வேந்தன் - மன்னன்; வெறுக்கையுள் - செல்வங்கள்; எல்லாம் தலை - எல்லாவற்றிலும் முதன்மையான செல்வமாகும்.

படைகளின் வகையான யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை என்னும் பகுதிகளால் பொருந்திப் பகைவரால் வரும் தீங்குக்கு அஞ்சாத வெல்லுகின்ற படைகள் மன்னனின் செல்வங்கள் எல்லாவற்றிலும் முதன்மையான செல்வமாகும்.

அஞ்சா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் ; வெல்படை - வினைத்தொகை

**2. உலைவிடத்து ஊறுஅஞ்சா வன்கண் தொலைவிடத்துத்**
**தொல்படைக்கு அல்லால் அரிது.**

உலைவிடத்து - போரில் தளர்வு வந்த போது; ஊறு அஞ்சா - வரும் தீங்குக்கு அஞ்சாத; வன்கண் - வல்லமை; தொலைவிடத்து - போரில் அழிவு வந்தபோது; தொல்படைக்கு - பழமையான படைவீரனுக்கு; அல்லால் அரிது - அல்லாமல் வேறு யாருக்கும் அரிதாகும்.

போரில் அழிவு வந்தபோதும் தளர்வு வந்தபோதும் வரும் தீங்குக்கு அஞ்சாத வல்லமை பழமையான படை வீரனுக்கு அல்லாமல் வேறு யாருக்கும் அரிதாகும்.

வன்கண் - பண்புத்தொகை ; அரிது - குறிப்பு வினைமுற்று.

**3. ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை**
**நாகம் உயிர்ப்பக் கெடும்.**

ஒலித்தக்கால் - ஒலிப்பதனால்; என்னாகும் - என்ன விளைவு

உண்டாகும் ?; உவரி - கடல் ; எலிப்பகை - எலியினது பகை; நாகம் - பாம்பு; உயிர்ப்பக் கெடும் - உயிர்த்த அளவில் அழியும்.

எலியினது பகை கடல்போல் ஒலிப்பதனால் என்ன விளைவு உண்டாகும்? பாம்பு உயிர்த்த அளவில் எலியின் பகை அழியும்.

பாம்பு சீறிய அளவில் எலிகள் ஓடிவிடும். அதனால் எலிபோன்ற பகையால் தீங்கில்லை. உவமை தொக்கி நின்றது.

எலிப்பகை - ஆறாம் வேற்றுமைத் தொகை.

4. அழிவின்று அறைபோகாது ஆகி வழிவந்த
வன்கண் அதுவே படை.

அழிவின்று - அழிவு இல்லாமல்; அறை போகாது ஆகி - பகைவர் வஞ்சனைக்கு ஆட்படாதவராகி; வழிவந்த - தொன்று தொட்டு வந்த; வன்கணதுவே - வல்லமையையுடையது தான்; படை - மன்னனுக்குப் படை என்று சொல்லப்படுவது.

போரில் அழிவு இல்லாமலும் பகைவர் வஞ்சனைக்கு ஆட்படாதவராகியும் தொன்று தொட்டு வந்த வல்லமையை உடையதுதான் மன்னனுக்குப் படை என்று சொல்லப்படும்.

இன்று - வினைஎச்சம் ; அதுவே - ××ஏ×× தேற்றம்.

5. கூற்றுஉடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.

கூற்று - எமன்; உடன்று - சினம் கொண்டு; மேல்வரினும் - போர்மேல் வந்தாலும்; கூடி - மனத்தோடு ஒன்றி; எதிர்நிற்கும் - எதிர்த்து நின்று போரிடும்; ஆற்றல் அதுவே - ஆற்றல் உடையது தான்; படை - படை ஆகும்.

எமன் சினம் கொண்டு போர்மேல் வந்தாலும் மனத்தோடு ஒன்றி எதிர்த்து நின்று போரிடும் ஆற்றல் உடையது தான் படை ஆகும்.

எமன் வந்தாலும் அஞ்சாமல் மனம் ஒன்றி நிற்பது படைக்குச் சிறப்பாகும்.

உடன்று - வினைஎச்சம் ; வரினும் - உயர்வு சிறப்பு உம்மை ; அதுவே - ஏ தேற்றம்.

6. மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு.

மறம் - வீரம்; மானம் - மான உணர்வு; மாண்ட - பெருமை மிக்க; வழிச்செலவு - முன்னோர் வழியில் செல்வது; தேற்றம் - மன்னனால் தெளியப்படுவது; என நான்கே - என்னும் நான்கும் தான்; ஏமம் - பாதுகாப்பு; படைக்கு - படை வீரனுக்கு

வீரம், மான உணர்வு, பெருமை மிக்க முன்னோர் வழியில் செல்வது; மன்னனால் தெளியப்படுவது என்னும் நான்கும் தான் படை வீரனுக்குப் பாதுகாப்பாகும்.

என - எண்ணிடைச் சொல் ; நான்கே - ஏ பிரிநிலை

**7. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த**
**போர்தாங்கும் தன்மை அறிந்து.**

தார் - தூசிப்படையை; தாங்கி - தடுத்து நிறுத்தி; செல்வது - மேலே செல்வது தான்; தானை - படை ஆகும்; தலைவந்த - எதிர்த்து நேரே வந்த ; போர்தாங்கும் - போரினைத் தடுக்கும்; தன்மை அறிந்து - நிலையினை (முறையினை) அறிந்து கொண்டு.

எதிர்த்து நேரே வந்த போரினைத் தடுக்கும் முறையினை அறிந்து கொண்டு வரும் தூசிப்படையைத் தடுத்து நிறுத்தி மேலே செல்வதுதான் படை ஆகும்.

தூசிப்படையைத் தடுப்பதோடு எதிர்த்துப் போரிடுவதும் படையின் செயலாகும்.

**8. அடல்தகையும் ஆற்றலும் இல்எனினும் தானை**
**படைத்தகையால் பாடு பெறும்.**

அடல் தகையும் - போரில் பகைவரைக் கொல்லும் தகைமையும்; ஆற்றலும் - வலிமையும்; இல்எனினும் - இல்லை என்றாலும்; தானை - படை; படைத்தகையால் - படைகளின் தகைமையால்; பாடு பெறும் - பெருமை பெறும்.

போரில் பகைவரைக் கொல்லும் தகைமையும் வலிமையும் இல்லை என்றாலும் படைகளின் தகைமையால் அப்படை பெருமை பெறும்.

தகைமை என்பது தகுதியைக் குறித்துத் தோற்றத்தை உணர்த்தியது.
அடல் - தொழிற்பெயர்.

**9. சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்**
**இல்லாயின் வெல்லும் படை.**

சிறுமையும் – அளவில் சிறிதாகலும்; செல்லாத் துனியும் – நீங்காத வெறுப்பும்; வறுமையும் – பொருள் இன்மையும்; இல்லாயின்; இல்லை என்றால் ; வெல்லும் படை – ஒரு மன்னனின் படை பகைவரை வெல்லும்.

அளவில் சிறிதாகவும் நீங்காத வெறுப்பும் பொருள் இன்மையும் இல்லை என்றால் ஒரு மன்னனின் படை பகைவரை வெல்லும்.

படை பெரிதாகவும் வெறுப்பின்றியும் செல்வமும் நிறைந்தால் படை பகைவரை வெல்லும்.

இல்லாயின் – ஆயின் வினை எச்சம்.

**10. நிலைமக்கள் சால உடைத்து எனினும் தானை**
**தலைமக்கள் இல்வழி இல்.**

நிலைமக்கள் – போரில் நிலைத்து நின்று போர்புரியும் வீரர்கள்; சால – மிகுதியும்; உடைத்து எனினும் – கொண்டிருந்தாலும்; தானை – படைகள்; தலைமக்கள் – தலைமை தாங்கும் வீரர்கள்; இல்வழி – இல்லாதபோது; இல் – இல்லை.

போரில் நிலைத்து நின்று போர்புரியும் வீரர்கள் மிகுதியும் கொண்டிருந்தாலும் தலைமை தாங்கும் வீரர்கள் இல்லாதபோது படைகள் இல்லை.

மக்கள் – வீரர்களைக் குறித்தது ; சால – உரிச்சொல் ; எனினும் – எச்சஉம்மை.

## படைச் செருக்கு

**(படையின் ஆற்றலால் உண்டாகும் பெருமிதம்)**

**1. என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ**
**முன்நின்று கல்நின் றவர்.**

என்ஐமுன் – என்னுடைய தலைவனுக்கு முன்னால்; நில்லன்மின் – எதிர்த்து நிற்காதீர்கள்; தெவ்விர் – பகைவர்களே!; பலர் – பலவீரர்கள் ; என்ஐமுன் – என்னுடைய தலைவனுக்கு முன்னால்; நின்று – எதிர்த்து நின்று; கல்நின்றவர் – கல்லாக நின்றவர்கள்.

என்னுடைய தலைவனுக்கு முன்னால் எதிர்த்து நின்று அழிந்து கல்லாக நின்றவர்கள் பல வீரர்கள். எனவே பகைவர்களே என்னுடைய தலைவனுக்கு முன்னால் எதிர்த்து நிற்காதீர்கள்.

கல் - நடுகல்; நில்லன்மின் - எதிர்மறை வியங்கோள்;

இக்குறள் நெடுமொழி வஞ்சிக்கு எடுத்துக் காட்டாகும்.

**2. கான முயல்எய்த அம்பினில் யானை**
**பிழைத்தவேல் ஏந்தல் இனிது.**

கான முயல் எய்த - காட்டு முயலை எய்த; அம்பினில் - அம்பை விட ; யானை பிழைத்த - யானை தப்பிக்கும் நிலையில்; வேல் - எய்யும் வேலினை ; ஏந்தல் - ஏந்தி இருப்பது; இனிது - சிறப்பாகும்.

காட்டு முயல் தப்பிக்காது எய்த அம்பைவிட யானை தப்பிக்கும் நிலையில் எய்யும் வேலினை ஏந்தி இருப்பது சிறப்பாகும்.

புறம்கொடுத்துச் செல்பவன்மீது போரிடுவதைவிட எதிர்நிற்கும் வீரனோடு போரிடுவதே சிறப்பு. பகைவனும் சிறந்த வீரனாக இருப்பதே படைக்குப் பெருமை.

கானமுயல் - ஏழாம் வேற்றுமைத் தொகை ; முயல்எய்த - இரண்டாம் வேற்றுமைத் தொகை; அம்பினில் - "இல்" உவம உருபு; பிழைத்த - பிறவினை

**3. பேராண்மை என்ப தறுகண்ஒன்று உற்றக்கால்**
**ஊராண்மை மற்றுஅதன் எஃகு.**

பேராண்மை என்ப - பெருமைக்குரிய ஆண்மை என்று கூறுவர்; தறுகண் - போர்செய்யும் ஆற்றல்; ஒன்று உற்றக்கால் - பகைவர்க்கு ஒரு தீங்கு நேர்ந்தால்; ஊராண்மை - அவர்க்காக உதவி செய்யும் ஆண்மை ; மற்று - மற்று; அதன் எஃகு - போராற்றுலுக்கு உதவும் வேல் போன்றது.

போர் செய்யும் ஆற்றலைப் பெருமைக்குரிய ஆண்மை என்று கூறுவர்; போரில் பகைவர்க்கு ஒரு தீங்கு நேர்ந்தால் அவர்க்காக உதவி செய்யும் ஆண்மை போராற்றலுக்கு உ தவும் வேல் போன்றது.

போரில் பகைவன் துன்பப்பட்டால் அத்துன்பம் தீர்ப்பதே படைக்குப் பெருமை.

என்ப - பலர்பால் வினைமுற்று; ஒன்று - "தீங்கு" வருவிக்கப்பட்டது; மற்று - மாற்று இடைச் சொல்.

**4. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்**
**மெய்வேல் பறியா நகும்.**

கைவேல் - தன்கையில் இருந்த வேலை; களிற்றொடு போக்கி - தான் எய்த களிற்றுடன் போகவிட்டு; வருபவன் - வருகின்ற வீரன்; மெய்வேல் - தன் உடம்பின் மேல் பாய்ந்திருந்த வேலை; பறியா நகும் - பிடுங்கி எடுத்து மகிழ்ந்தான்.

தன்கையில் இருந்த வேலைப் போர்க்களத்தில் எதிர்வந்த யானை மீது எய்து அதனோடு போகவிட்டு வருகின்ற வீரன் தன் உடம்பின்மேல் பாய்ந்திருந்த வேலைப் பிடுங்கி எடுத்து மகிழ்ந்தான்.

தான் போர்புரிய மற்றொரு வேல் கிடைத்த மகிழ்வினால் அவனது பெருமை புலப்பட்டது.

வருபவன் - வினையால் அணையும் பெயர்; மெய்வேல் - ஏழாம் வேற்றுமைத் தொகை; பறியா - உடன்பாட்டு வினை எச்சம்.

5. விழித்தகண் வேல்கொண்டு எறிய அழித்து இமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு.

விழித்தகண் - பகைவரைச் சினந்து பார்த்த கண்; வேல் கொண்டு எறிய - பகைவன் வேலால் எறியும் போது; அழித்து - சினந்து பார்த்த பார்வையை மாற்றி; இமைப்பின் - கண்ணை இமைத்தால்; ஓட்டன்றோ - புறமுதுகிட்டு ஓடுவதல்லவா?; வன்கண்அவர்க்கு - வல்லமை பொருந்திய அந்த வீரருக்கு

பகைவரைச் சினந்து பார்த்த கண், பகைவன் வேலால் எறியும் போது சினந்து பார்த்த பார்வையை மாற்றிக் கண்ணை இமைத்தால் அது வல்லமை பொருந்திய அந்த வீரருக்குப் புறமுதுகிட்டு ஓடுவது போல ஆகும்.

பகைவரைச் சினந்த பார்வையிலிருந்து இமைத்து விட்டால் புறமுதுகிட்டு ஓடுவதற்கு இணையாகும்.

விழித்த - பெயரெச்சம்; கொண்டு - கருவிப் பொருளில் வந்த உருபு; அழித்து, இமைப்பின் - வினை எச்சங்கள்; ஓட்டு - "ஓடு" என்பதன் அடியாகப் பிறந்த தொழிற்பெயர்.

6. விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து.

விழுப்புண் - மேன்மையான புண் (முகத்திலும், மார்பிலும் படும்புண்); படாத நாள் எல்லாம் - படாத நாள்களை எல்லாம்;

வழுக்கினுள் - வழுக்கிய பயன்படாதவற்றுள்; வைக்கும் - வைப்பான்; தன்நாளை எடுத்து - தனக்குச் சென்ற நாள்களை எடுத்து.

முகத்திலும் மார்பிலும் படும்மேன்மையான புண்படாத நாள்களை எல்லாம் பயன்படாதவற்றுள் தனக்குச் சென்ற நாள்களாக எடுத்துவைப்பான்.

விழுப்புண் என்பதால் வீரன் என்பது பெறப்பட்டது. வீரன் விழுப்புண் பட்டால்தான் படைக்குப் பெருமை.

**7. சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்**
**கழல்யாப்புக் காரிகை நீர்த்து.**

சுழலும் - சுற்றிவரும்; இசைவேண்டி - வெறும் புகழை மட்டும் விரும்பி; வேண்டா உயிரார் - வாழ்தலை வேண்டாத வீரர்; கழல்யாப்பு - கழல் அணிந்துள்ளமை ; காரிகை நீர்த்து - அழகினை உடையது ஆகும்.

சுற்றிவரும் வெறும் புகழைமட்டும் விரும்பி வாழ்தலை விரும்பாத வீரர் வீரக் கழல் அணிந்துள்ளமை அழகினைத்தரும் அலங்காரத் தன்மையாகும்.

புகழ்பெற்று உயிர் வாழ விரும்பாதவர் அணியும் கழல் அலங்காரம் மட்டுமே.

யாப்பு - கட்டுதல்; காரிகை - அழகு, அணிகலன்.

**8. உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்**
**செறினும்சீர் குன்றல் இலர்.**

உறின் - போர் வந்தால்; உயிர் அஞ்சா மறவர் - தம் உயிருக்காக அஞ்சாத வீரர்; இறைவன் - மன்னன்; செறினும் - சினந்து தடுத்தாலும்; சீர் குன்றல் இலர் - தம் வீரச் சிறப்பில் குறைய மாட்டார்.

போர் வந்தால் தம் உயிருக்காக அஞ்சாத வீரர் மன்னன் சினந்து தடுத்தாலும் தமது வீரச் சிறப்பில் குறைய மாட்டார்.

உயிருக்கு அஞ்சாத வீரர் மன்னன் தடுத்தாலும் நிற்க மாட்டாமல் போருக்குச் செல்வதில் ஆர்வமாய் இருப்பர்.

அஞ்சா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; உறின் - வினைஎச்சம் ; செறினும் - "உம்" எச்ச உம்மை.

**9. இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே**
**பிழைத்தது ஒறுக்கிற் பவர்.**

இழைத்தது - தாம் கூறிய மொழிகளை ; இகவாமை - நீங்காமல்; சாவாரை - சொன்னதற்கேற்பப் போரில் இறந்து போகும் வீரரை; யாரே - யார்தான்; பிழைத்தது - அந்த வீரர் தப்பிய செயலுக்கு; ஒறுக்கிற்பவர் - அவரை இகழ்பவர்கள்.

தாம் கூறிய வஞ்சின மொழிகளை நீங்காமல் சொன்னதற்கேற்பப் போரில் இறந்துபோகும் வீரரை அந்த வீரர் தப்பிய செயலுக்காக இகழ்பவர்கள் யார்?

வஞ்சினம் கூறியவாறே போர்புரிந்து இறக்கும் வீரரை யாரும் இகழமாட்டார்.

**10. புரந்தார்கண் நீர்மல்கச் சாகற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து.**

புரந்தார் - தன்னைக் காக்கும் மன்னனின்; கண்நீர் மல்க - கண்களிலிருந்து கண்ணீர் பெருகுமாறு; சாகற்பின் - வீரன் ஒருவன் இறக்க நேர்ந்தால்; சாக்காடு - அந்த இறப்பு; இரந்து கோள்தக்கது - பிச்சை எடுத்தாயினும் கொள்ளத் தக்க உடைத்து - தகுதியை உடையது.

தன்னைக் காக்கும் மன்னனின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகுமாறு வீரன் ஒருவன் இறக்க நேர்ந்தால் அந்த இறப்பு அவன் பிச்சை எடுத்தாயினும் கொள்ளத்தக்க தகுதியை உடையது.

இரந்து - வினை எச்சம்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம்

### வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்தது

காவிரிப்பூம்பட்டினத்திலே வணிக குலத்தைச் சேர்ந்த ஒருவன் வாழ்ந்து வந்தான். பல வகைச் செல்வங்களிலே சிறந்தவன் அவன். வெகுநாட்களாகக் குழந்தைப் பேறின்றி வருந்தினான். அவன் தனது இல்லாளுடன் சேர்ந்து பலவகை தருமங்களைச் செய்ததால் பெண் குழந்தை பிறந்தது. அவளைச் செல்வமாகப் போற்றி வளர்த்து வந்தான். அவளுக்கு மணப்பருவமும் வந்தது. வணிகனது தங்கை மகன் ஒருவன் மதுரையிலே வாழ்ந்து வந்தான். மருமகனுக்கு ஏற்கனவே மணமாகியிருந்தது. இருந்தாலும் முறையை விட்டுக் கொடுக்க விரும்பாத வணிகன் அவனுக்கேதன் அருமை மகளைக்

கொடுப்பதாகச் சொல்லிக்கொண்டிருந்தான். அதையே தன் உறவினர்களிடமும், அடிக்கடி தெரிவித்துக் கொண்டிருந்தான்.

சில நாட்கள் சென்றன. வணிகன் இறந்து போனான். அவனது கற்பிற்சிறந்த மனைவியும் உடன் இறந்தாள். உறவினர்கள் இறந்தவருக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்து முடித்தனர். அந்தச் சேதியை மதுரை மருமகனுக்கு ஓர் ஓலை மூலம் தெரிவித்தனர் உறவினர். அந்த ஓலையிலே, உனது மாமன் இறந்து போனான்; உடன் மாமியும் இறந்து போனாள். அவனுக்கு ஏராளமான செல்வம் உண்டு, அவனுக்கு ஒரு குமாரியும் உண்டு. அவளை உனக்கே மணம் செய்து கொடுப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தான். ஆகையால் நீ வந்து உன் மாமன் மகளை மணம் செய்து செல்வாயாக என்று எழுதி இருந்தனர். மாமனும் மாமியும் ஒருங்கே இறந்த சேதி கண்டு மிகவும் வருந்தினான் மதுரை மருமகன். பிற்பாடு ஒருவாறாக மனம் தேறித் தன் உறவினர் சிலருடன் மதுரையை விட்டு நீங்கிப் பட்டினம் சேர்ந்தான். அங்கு தன் மாமன் இல்லம் சென்றிருந்தான்.

சில நாட்கள் போயின. மாமன் மகளை அழைத்துச் சென்று மதுரையிலே உறவினர் முன்னிலையிலே மணப்பேன் என்று கூறி மாமன் தேடிய செல்வங்களையும் பிறவற்றையும் எடுத்துக்கொண்டு கிளம்பினான். தன்னுடன் வந்த உறவினர்களையெல்லாம் முன்னே செல்லுமாறு செய்தான். தனது ஏவலாளர்களோடு நாள் ஒன்றுக்கு ஒன்றரைக் காத தூரம் வழி நடந்து சென்று கொண்டிருந்தான். வருகின்ற வழியில் திருப்புறம்பயம் என்ற க்ஷேத்திரத்தையடைந்தான். அன்று இரவு அங்கே தங்கிச் செல்ல விரும்பினான். அந்தத் தலத்தின் திருக்கோவிலுக்கு அருகேயிருந்த கிணற்றிலே நீராடிவிட்டு வன்னி மரத்தடியிலே உணவாக்கி உண்டான். திருக்கோவிலருகே படியொன்றின்மீது தலைவைத்துத் தூங்கினான். அதுசமயம் கொடிய நச்சு நாகம் ஒன்று வந்து அவனைக் கொத்தியது. விஷம் வேகமாகத் தலைக்கேறியதால் வணிக மகன் இறந்தான். ஏவலர்களும் தோழியர்களும் புலம்பி அழுதனர். அவனது மாமன் மகள் செய்வது இன்னது என்று தெரியாமல் திகைத்தாள். மணமாகாத மகள் ஆனபடியால் மதுரை மகனது உடலைத் தீண்டாமல் சோகப்

பதுமையாக ஒருபுறத்தே உளங்கலங்கி நின்றாள். சாவு, அழுகை, அயர்வு முதலியவற்றைக் கண்ட அப்பெண்மணி அம்புபட்ட பைங்கிளிபோலத் துடித்தாள். கீழே சோர்ந்து விழுந்து மயங்கினாள். சேடியர் சேர்ந்து அறிவு தெளிவித்தனர். அக்குலமகள் அழுத அழுகைக்கும் புலம்பிய புலம்பலுக்கும் எல்லை கிடையாது. பல பல சொல்லி உரக்கக் கூறிக் கதறினாள். ஆணை இழந்த அன்றில்பெடைபோலத் தன்னந்தனியாக இருந்து அரற்றினாள்.

வணிக மகளின் அழுகையையும் புலம்பலையும் கேட்ட அக்கம்பக்கத்தவர் உறக்கம் விட்டு எழுந்தனர். அவளது துன்பம் கண்டு உள்ளம் நடுங்கினர்; மனம் உளைந்தனர். பல சிவத்திருப்பதிகள் தோறும் சென்று வணங்கிய திருஞானசம்பந்தர் அப்போது அவ்வூர்த் திருமடத்திலே எழுந்தருளியிருந்தார். அவரும் அவ்வழுகையொலியைக் கேட்டார். விவரம் அறிந்ததும் திருக்கோவிலின் பக்கம் விரைந்து போனார். கன்னிப் பெண்ணே! நீ யார்? என்று வணிகப் பெண்ணைப் பார்த்துப் பரிவுடன் வினாவினார். அந்தப் பெண்ணும் அவரை வணங்கி நடந்த எல்லாவற்றையும் அவரிடம் சொல்லித் தனக்கும் மதுரை வணிகனுக்கும் ஏற்படவிருந்த மணத்தினையும் தெரிவித்தாள். தனித்த பெண்ணின் துயர் போக்கக் கருதினார் காழிப்பிள்ளையார். நீத்த வணிகனின் உடலருகே சென்று, அவனது உடல் அமிர்த மயமாகும்படி அருள் நோக்கம் பாலித்தருளினார். கொடிய நஞ்சு உடலிலிருந்து இறங்கிச் சென்றது. செத்துக்கிடந்த வணிக மகன் புத்துயிர் பெற்றவனாகி உறங்கிக் கிடந்தவன்போல எழுந்து உட்கார்ந்தான். அந்த அதிசயத்தைக்கண்டு அங்கிருந்தோர் அனைவரும் திருஞானசம்பந்தரைப் போற்றித் தொழுதனர். கன்னிப் பெண்ணும் களியன்னம்போல் ஒரு பக்கம் ஒதுங்கியிருந்தாள்.

வணிகக் கன்னி மாமன் மகளாக இருந்தாலும் தலைவன் இறந்த காலத்தும் உயிர் பெற்ற காலத்தும் அவனைத் தொடாதிருந்த பெற்றியையும் அன்பையும்கண்டு ஆச்சரியமடைந்த திருஞான சம்பந்தர் மதுரை வணிகனைப் பார்த்து, வணிகர் மணியே! உனது அம்மான் மகளான இக்கன்னி திருமகளை ஒத்தவள். எக்காலும் உன்

உடல் தீண்டத் தகுதி பெற்றவள். இவளை இவ்விடத்திலே விவாகம் செய்துகொண்டு செல்க என்று நன்று பகன்றார். பிள்ளையாரின் திருவாக்கைப் போற்றிய அவ்வணிகனும், எம் குலத்தோரும் தக்க சான்றுகளும் இல்லாமல் எவ்வாறு மணம் முடித்துக் கொள்வேன்? என்றான்.

திருஞான சம்பந்தர் மதுரை வணிகனை நோக்கி, மகனே! இப்பெண் பிறந்தபோதே உனது மாமன் உனக்காகவே இவளைப் பேசியதை உறவுக்காரர்கள் பலர் அறிவார்கள். அது மட்டுமல்லாமல் இந்த வன்னியும், கிணறும், இலிங்கமும் சாட்சிகளாகும். எனது சொல்லைத் தட்டாமல் இங்கேயே மணம் புரிந்து செல்வாயாக என்று அருளிச் செய்தார். திருஞான சம்பந்தரையே ஆசிரியரும் நண்பரும் தெய்வமும் சுற்றமும் எனக் கொண்ட அவ்வணிகன் அவ்விடத்திலேயே முறைப்படி மணம் முடித்து விடைபெற்றுப் புறப்பட்டான்.

பணியாட்களும் மகளிர் கூட்டமும் உடன் வர மதுராபுரியை அடைந்தான். மாமன் மகளை அவன் மணந்த சேதி கேட்ட சுற்றத்தார் பெரிதும் மகிழ்ந்தனர். பின்பு அவன் தான் தேடிய பொருள்களையும் மாமன் தேடித்தந்த பொருள்களையும் ஒரேயிடத்தில் தொகுத்து வைத்து வாணிபத்தால் குபேர சம்பத்தைப் பெற்றான். காலாகாலத்திலே இரு மனைவியரும் புதல்வர்களைப் பெற்றுக் கொடுத்தனர். வணிகன் மிக்க நலமுடன் வாழ்ந்து வந்தான்.

ஆண்டுகள் சென்றன. மூத்த மனைவியின் குமாரர்கள் மிகவும் கொடியவர்களாக இருந்தார்கள். இளையவளுக்கு ஒரு நல்ல புதல்வன் இருந்தான். இருவருடைய புதல்வர்களும் ஒருநாள் வீதியிலே விளையாடிக் கொண்டிருந்தபோது திடீரெனச் சண்டை மூண்டது. மூத்தாள் மக்கள் இளையாள் மகனைச் சினந்து அடித்தனர். இதன் காரணமாக, இளையவளுக்கும் மூத்தவளுக்குமிடையே பேச்சுவார்த்தை தடித்தது. மூத்தவள் இளையவளை இழிவாகப் பேசியதோடு, நீ எந்த ஊர்? எந்தக் குலம்? என் கணவனைக் கண்டு ஆசைப்பட்டு வந்த காமக் கிழத்தியாகிய நீ கருவம் கொள்வது தகாது. நீ என் கணவனை அக்னிசாட்சியாக மணந்து கொண்டவள் என்பதற்கு என்ன சாட்சி இருக்கிறது? இருந்தால் காட்டுக என்று கடுமொழி புகன்றாள்.

கற்பிலே சிறந்த அக்காரிகை மிகவும் மனம் வாடினாள். என் கணவன் பாம்பு தீண்டி மாண்டபோது உயிர் அளித்த திருஞான சம்பந்தரின் ஆணையால் எனது கணவன் என்னைத் திருப்புறம்பயத்திலே எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப் பெருமானும், வன்னி மரமும், கிணறும் காணத் திருமணம் முடித்தான்; அந்த மூன்றும் சாட்சிகளாக உள்ளன, என்று கூறினாள். அதுகேட்ட மூத்தாள் கைகொட்டிச் சிரித்தாள். நன்று வெகு நேர்த்தி! நல்ல சாட்சிகளாகத்தான் சொன்னாய்! அச்சாட்சிகள் மூன்றும் இவ்விடத்திற்கு வருமானால் அதுவும் உண்மையாகத்தான் இருக்கும் என்றாள்.

இளையவள் துன்பத்தில் ஆழ்ந்தாள். பெருமூச்சு விட்டாள். ஐயோ தெய்வமே! என்று வருந்தினாள். கடவுளே! தந்தை தாயிழந்த பேதையான எனக்கு வேறு துணை யார்? மாமனாக வந்து வழக்குரைத்து உரிமை வாங்கித் தந்த பெருமானே! நீரே கதி என்று சோமசுந்தரப் பெருமானை நினைத்தவளாகி அன்றிரவு முழுவதும் உணவின்றி வருந்திக் கிடந்தாள். மறுநாள் விடிந்ததும் திருக்கோவில் சென்று பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடிச் சோமசுந்தரப் பெருமானை வழிபட்டு நின்றாள். அன்று நாங்கள் மணம் புரிந்த காலத்தில் சாட்சியாக நின்ற வன்னி மரமும், கிணறும், சிவலிங்கமாகிய தேவரீரும் இன்று இங்கு வந்து தோன்றி எனது மாற்றாளின் ஏச்சைப் போக்கி அடியாளைப் பாதுகாக்காவிட்டால் இறந்து போவேன் என்று முறையிட்டாள்.

அக்கணமே சோமசுந்தரப் பெருமானது திருவருளால் அனைவரும் கண்டு வியப்படையும் வண்ணம் மணம் ஆன காலத்திலே திருப்புறம் பயத்தலத்தில் இருந்தபடியே மூன்று சாட்சிகளும் திருக்கோவிலின் வடகிழக்குத் திசையிலே விரைவாக வந்து தோன்றின. உடனே இளையவள் மூத்தவளை அழைத்து வந்து, சொக்கநாதப் பெருமானை வணங்கி விட்டு, வன்னி மரம் இது! கிணறு இது! சிவலிங்கம் இது! இந்த மூன்றுமே எனது விவாகத்திற்குச் சாட்சியாகி நின்றன என்று காட்டிக் கூறினாள்.

இளையவளாகிய வணிகமாதின் கற்பின் சிறப்பையும் சிவபக்தியையும், சோமசுந்தரப் பெருமான் அவளுக்காக அருள் புரிந்ததையும் மதுரை மக்கள் அனைவரும் தெரிந்து பேராச்சரியம் அடைந்தனர்; பேருவகை கொண்டனர்.

மூத்தாள் துன்பத்துள் ஆழ்ந்தாள். ஊர்க்காரர் மூத்தாளைப் பழித்துப் பேசினர். இவளது கணவனும் அவளை குலக்கேடி எனக் கருதிப் பழித்துப் பேசினான்; அவளை வெறுத்துத் தள்ளினான். ஆனால் இளையவளோ கணவன் அடிபணிந்து, அன்பரே! எனது கற்பின்திறத்தை உலகறியச் செய்து காட்டியவள் இவளே! இவள் எனது மாற்றாள் அல்ல; தாயற்ற எனக்குத் தாய்; நாங்கள் இனி மேல் ஒற்றுமையாக வாழ்வோம் என்று மொழிந்து மூத்தாளைத் தழுவிக் கொண்டாள்.

வணிகனின் இல்லற வாழ்வு தூய்மை பெற்றது. இரு மனைவியரும் பொறாமையின்றி ஒன்றி வாழ்ந்தனர். புதல்வர்களும் நல்லவர்களாக மாறிவிட்டனர். தனது இளைய மனைவியினது கற்பின் சிறப்பால் ஆயுள், ஆரோக்யம், ஐசுவரியம் எல்லாம் பெருக, தருமமும் கீர்த்தியும் ஓங்க ஒழுக்கத்திலே சிறந்து விளங்கினான் மதுரை வணிகன்.

இளையவளும் இலக்குமியைப் போல வாழ்ந்திருந்தாள்.

*(திருவாலவாய்க் காண்டம் முற்றிற்று)*

---

## மடாலய நிகழ்வுகள்

23.07.2022 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் **உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே** என்னும் தலைப்பில் புலவர்மாமணி ஆறு.மெ. மெய்யாண்டவர் சொற்பொழிவாற்றினார்.

27.08.2022 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் **அறம்பாடிற்றே ஆயிழை கணவ** என்னும் தலைப்பில் பேராசிரியர் முனைவர் அ.சங்கர்தாஸ் உரையாற்றினார்.

15.08.2022 அன்று சுதந்திர தின விழாவில் முனைவர் திருமலைச்சாமி கலந்து கொண்டு கொடி ஏற்றிச் சிறப்பித்தார்.

05.09.2022 அன்று ஆசிரியர் தின விழாவில் பேராசிரியர் முனைவர் மு.பழனி ராகுலதாசன் மற்றும் பேராசிரியர் முனைவர் மு.பழனியப்பன் ஆகியோர் கலந்து கொண்டு ஆசிரியர்களுக்கு வாழ்த்துரை வழங்கினர்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்